4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண் எம். 8198

## சென்னையில் 550 மாணவர் கைது

சென்னை, மார்ச். 31 —
சென்னை கால்நடை மருத்துவக் கல்லூரி மாணவர்கள் சம்பள வித்தியாசத்தை நீக்கக்கோரி, நேற்று கல்லூரி 'டீனை' கெரோ செய்தனர். அப்போது 550 மாணவர்களைப் போலீசார் கைதுசெய்து வழக்குப் பதிவு செய்துள்ளனர்.

மற்றும், அந்தக் கல்லூரியைச் சேர்ந்த 35 மாணவர்கள் தங்களது கோரிக்கையை வலியுறுத்தி நேற்றுக் காலை சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கத் துவங்கியபோது, அவர்களைப் போலீசார் அப்புறப்படுத்தி, அவர்கள்மீது வழக்கும் பதிவுசெய்துள்ளனர்.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10 மதுரை 1—4—72 சனி மலர் 78

## பாங்கு ஊழியர் ஒரு மணி நேர வேலைநிறுத்தம்

புதுடெல்லி, மார்ச். 31—
இந்தியாவிலுள்ள எல்லா பெரியநகரங்களிலும் பாங்கு ஊழியர்கள் நேற்று ஒரு மணி நேரம் வேலை நிறுத்தம் செய்தனர்.

நிர்வாகம் ஊழியர்களை மிகக் கொடுமையாக பழிவாங்குவதை எதிர்த்து கடந்த மார்ச் 9ம் நாள் முதல் வேலைநிறுத்தம் செய்துவரும் ஆந்திரா பாங்கு ஊழியர்களுக்கு ஆதரவாக இந்த ஒரு மணி நேர வேலைநிறுத்தம் நடைபெற்றது.

# இந்திய நாட்டில் ஜனநாயகப் படுகொலை

# உலகெங்கும் அம்பலப்படுத்துவோம்

## காங்கிரஸ் பொய்ப் பிரச்சாரத்திற்கு பதிலடி

கல்கத்தா, மார்ச் 31 —
மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மேற்கு வங்க மாநிலக் கமிட்டியின் கூட்டம் நடந்து முடிந்தபின் செயலாளர் தோழர் பிரமோத்தாஸ் குப்தா பத்திரிகையாளரிடையே பின்வருமாறு தெரிவித்தார்,

பாசிஸ்ட் ஹிட்லர் பாணியில் தேர்தலுக்குப் பிறகு இந்த நாட்டில் ஒருபிரச்சாரம் செய்யப்படுகிறது. தேர்தலில் மோசடி நடத்தி மார்க்சிஸ்ட் கட்சி தோற்கடிக்கப்பட்டுள்ளதால் இனிமேல் மார்க்சிஸ்ட் கட்சி தலைமறைவாகப்போய்விடும் என்று பிரச்சாரம் செய்கிறார்கள்.



பிரமோததாஸ் குப்தா

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மீது பயங்கரமான நீசத்தனமான தாக்குதலை தொடுக்க ஆளும் காங்கிரசும் முதலாளித்துவ வட்டாரங்களும் முயற்சி செய்கின்றன. இந்த நாட்டில் மிச்சசொச்சமுள்ள ஜனநாயக உரிமைகளைப் படுகொலை புரிவதற்காகவே காங்கிரஸ் பாசிஸ்ட் ஹிட்லர் பாணியில் இத்தகைய வெறித்தனமான அப்பட்டமான பொய்ப் பிரச்சாரத்தைக் கட்டவிழ்த்துவிட்டுள்ளது என்று தோழர் பிரமோத்தாஸ் குப்தா கண்டனம் செய்தார்.

அவர் மேலும் பேசுகையில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட் பீரோவும், மாநிலக் குழுவும் மேற்கு வங்க தேர்தல் மோசடியை அம்பலப்படுத்தவும் ஜனநாயக உரிமைகளைப் பாதுகாக்கவும் இந்த நாடு முழுதும் விரிவான அரசியல் இயக்கத்தை நடத்தத் தீர்மானித்துள்ளது என்றார்.

இந்த அரசியல் இயக்கத்தின் முதல் கட்டமாக இந்த நாடெங்கும் பொதுக் கூட்டங்கள் நடத்தப்படும் என்றார்.

### வெளி நாடுகளில் பிரச்சாரம்

பத்திரிகையாளர்கள் கூட்டத்தில் பங்கு கொண்ட தோழர் ஜோதிபாசு, இந்தியாவில் நடந்துள்ள தேர்தல் மோசடிகளைப் பற்றி, வெளிநாடுகளில் உள்ள மக்களுக்கு எடுத்துச் சொல்ல தான் முதலில் லண்டனுக்குப் போக இருப்பதாகவும், இது குறித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி ஏப்ரல் 14-ம நாள் முடிவு செய்யும் என்றும் அறிவித்தார்.

இந்நோக்கத்துக்காக தோழர் ஜோதிபாசு வெளிநாடு செல்ல இருப்பதைப் பற்றி மோசடித் தேர்தலில் முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அமர்ந்திருக்கும் சித்தார்த்த சங்கர்ரே, ஜோதிபாசு வெளிநாடுகளுக்குச் சென்று இந்திராகாந்தி மீது அவதூறு பொழியக்கூடாது என்று கூறியிருந்தார். அதுகுறித்து தோழர் ஜோதிபாசுவிடம் பத்திரிகையாளர்கள் குறிப்பிட்டார்கள்.

இதற்கு பதில் கூறும் வகையில், ஜனநாயகம் இங்கு படுகொலை செய்யப்பட்டிருக்கும் பொழுது வெளிநாடுகளிலுள்ள ஜனநாயக ஆர்வமுள்ள மக்களிடையே இந்த உண்மையை எடுத்துக் கூற எனக்கு உரிமை உண்டு.

### ஸ்பெயினைப் பற்றி பிரச்சாரம்

முன்னொரு தடவை ஸ்பெயின் நாட்டின் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கத்தை ராணுவ வெறியர்கள் கவிழ்த்தபின் அதை எதிர்த்து அங்கு உள்நாட்டு யுத்தமே நடந்தது. ஸ்பெயின் நாட்டு மக்களின் அத்தகைய உரிமைப் போராட்டத்தை ஆதரித்து நான் உட்பட இந்நாட்டிலுள்ள பலர் வெளிநாடுகளுக்குச் சென்று பிரச்சாரம் செய்தோம் என்பதை இச்சந்தர்ப்பத்தில் ஞாபகப் படுத்த விரும்புகிறேன் என்றார்.

## தொடக்கப் பள்ளி

## ஆசிரியர் சட்ட எரிப்புபோராட்டம்

சென்னை, மார்ச் 31—
வேலை பாதுகாப்புச் சட்டம் இயற்றக்கோரி தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள் நடத்தும் போராட்டத்தின் அடுத்த கட்டமாக தமிழகமெங்கும் ஏப்ரல் 30-ம் தேதி சட்ட எரிப்புப் போராட்டம் நடத்தப்படும் என்று ஆசிரியர் கூட்டணி மாநில செயற்குழு அறிவித்துள்ளது.

செயற்குழுக் கூட்டம் சென்னையில் மார்ச் 26-ம் தேதி நடைபெற்ற போது இந்த முடிவு எடுக்கப்பட்டது.

கடந்த மார்ச் 12-ம் தேதி தமிழகமெங்கும் கல்வி எழுச்சி நாளில் எழுப்பப்பட்ட 10 அம்சக் கோரிக்கைகள் சம்பந்தமாக அரசாங்கம் காலக்கெடுவை நீட்டிக் கொண்டு செல்லுவது ஆசிரியர்களுக்கு நம்பிக்கையூட்டுவதாக இல்லை என்று செயற்குழு அறிவித்தது.

இந்நிலையில் 1920-ம் ஆண்டில் ஆங்கிலேயன் காலத்தில் இயற்றப்பட்ட சுதந்திரம் பெற்ற கால் நூற்றாண்டுக்குப் பின்னும் அமுலாக்கப்படும் கல்விச் சட்டத்தை தமிழக மெங்கும் ஏப்ரல் 30-ம் தேதி ஆசிரியர்கள் தீயிட்டுக் கொளுத்துவார்கள் என்று செயற்குழு அறிவிக்கிறது.

இந்தப் போராட்டத்தை நடத்துவதற்கு ஜே. எஸ். ராஜன் அமைப்பாளராகக்கொண்ட 7 பேர் கொண்ட நடவடிக்கைக் குழு அமைக்கப்பட்டுள்ளது

### கெரோ

ஆசிரியர் கூட்டணியின் மற்றொரு கோரிக்கையான ஊராட்சி ஒன்றிய ஆசிரியர் மாறுதல் குழுவில் மாற்றம்செய்யவேண்டும் என்ற கோரிக்கையை ஏப்ரல் 20ம் தேதிக்குள் ஏற்காவிட்டால் கெரோ போராட்டம் நடத்தவும் ஆசிரியர் கூட்டணியின் மாநில செயற்குழு முடிவு செய்துள்ளது

மே மாதத்தில்ஊராட்சி ஒன்றிய அலுவலகங்களின் முன்பும் குழுவில் கலந்து கொள்ளச் செய்கிறவர்கள் முன்பும் மறியல் செய்யப்படும் என்று அறிவிக்கப்படுகிறது

பழனியில் ஏப் 22, 23 தேதிகளில் கூடும் மாநில பொதுக் குழு கூட்டத்தில் இதற்கான திட்டம் வகுக்கப்படும்

தற்போது ஆசிரியர் மாறுதல் குழுவில் அதிகாரிகள் அல்லாத சட்டமன்ற உறுப்பினர்களும் ஒன்றியப் பெருந்தலைவர்களும் இருக்கின்றனர். இந்தக் குழுவிலுள்ள அதிகாரிகள் அல்லாதவர்கள் மனம் போனபடி ஆசிரியர்களை மாற்றுகின்றனர். அரசியல்வாதிகள் இக்குழுவில் இடம் பெற்றிருப்பதால் கலெக்டர் போட்ட உத்திரவுகளையே அமுல்படுத்தப்பட முடியாமல் இருக்கிறது. ஆகவே இக்குழுவிலிருந்து அதிகாரிகள் அல்லாதவர்களை நீக்கவேண்டும் என்று ஆசிரியர் கூட்டணி கோருகிறது.

## 350 நெசவாளர் கைது

## மதுரையில் 12 ஆயிரம்பேர் வேலை நிறுத்தம்

மதுரை, மார்ச் 30—
கூலி உயர்வு, போனஸ், சட்டப் பாதுகாப்பு ஆகிய கோரிக்கைகளுக்காக மதுரையிலும், செல்லூர் பகுதியிலும் கைநெசவுத் தொழிலாளர்கள் சுமார் 12 ஆயிரம் பேர் தொடர்ந்து வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

இன்று காலையில் முற்றுகைப் போராட்டத்தில் இறங்கிய 350 பேர் கைது செய்யப்பட்டனர்.

தங்களுக்கு 10 சதவீத போனஸ் 25 சதவீதம் சம்பள உயர்வு போன்ற கோரிக்கைகளை தொழிலாளர்கள் எழுப்பியுள்ளனர். மதுரை மாவட்ட ஐக்கிய கைநெசவுத் தொழிலாளர் (சி ஐ டி.யூ) சங்கமும் ஸ்தாபன காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட், தி.மு.க பார்வர்டு பிளாக், இந்திரா காங்கிரஸ் ஜனசங்கம் ஆகிய 6 கட்சிகளைச் சேர்ந்த சங்கங்களும் சேர்ந்து கூட்டுக் கமிட்டி அமைத்து போராட்டத்தை வழி நடத்திச் சென்றன.

### சமரசப் பேச்சு

ஆர்ப்பாட்டம், மறியல் போன்ற நடவடிக்கைகளுக்குப் பின்னால், மாவட்ட ஆட்சித் தலைவர், போலீஸ் அதிகாரிகள் முன்னிலையில் மார்ச் 28-ந் தேதி சமரசப் பேச்சு வார்த்தை நடைபெற்றது.

சமரசப் பேச்சுவார்த்தையில், அதிகாரிகளின் நிர்ப்பந்தத்திற்கு இணங்கிமற்ற சங்கங்கள், குறைவான கூலி உயர்வு ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்டு கையொப்பமிட்டன. தொழிலாளிக்குப்பாதகமான இந்த ஒப்பந்தத்தில் சி. ஐ. டி. யூ. சங்கம் கையெழுத்திட மறுத்துவிட்டது.

அன்று இரவு நடந்த தொழிலாளர்கள் கூட்டத்தில் சி ஐ டி யூ சங்கத்தின் நிலையை விளக்கிக் கூறப்பட்டது.

அதற்குப்பின் இத்தொழிலின் கேந்திரமான பகுதியில் பாவு போடும் தொழிலாளர்கள் அந்த 6 சங்கங்கள் செய்துள்ள ஒப்பந்தத்தை நிராகரித்து தொடர்ந்து போராடவும் வேலை நிறுத்தம் செய்யவும் முடிவு செய்தனர்.

இத் தொழிலாளர்களின் போராட்டத்திற்கு சி. ஐ டி யூ. சங்கம் முழு ஆதரவு அளித்து வருகிறது.

### வேலை நிறுத்தம்

6 சங்கங்களும் செய்து கொண்ட குறைவான கூலி உயர்வு ஒப்பந்தத்தைக் கூட மாஸ்டர் வீவர்கள் அமுலாக்க மறுத்துவிட்டனர். முதலாளிகளின் இந்த அக்ரமபாவத்தையும், அக்கிரமத்தையும் எதிர்த்து இன்று காலை முதல் மற்ற பகுதி தொழிலாளர்களும் தொடர்ந்து வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

இன்று காலை 9மணிமுதல் எல்லாத் தொழிலாளர்களும், மீனாட்சி கம்பெனியில் கூடியிருந்த மாஸ்டர் வீவர்களை சுற்றி வளைத்துக் கொண்டு "கெரோ" போராட்டம் நடத்தினார்கள்.

உயர்தர போலீஸ் அதிகாரிகளும் ஆர். டி. ஓ வும் தொழிற்சங்கத் தலைவர்களை பேச்சுவார்த்தைக்கு அழைத்தனர். தொழிலாளர்கள் அனைவரும் முழு மனதாக கேட்டுக்கொண்டதின் பேரில் சி ஐ.டி.யூ. சங்கமும் பேச்சுவார்த்தையில் கலந்துகொள்ள ஒப்புக்கொண்டுள்ளது.

இதற்கிடையில் காலையிலிருந்து கெரோ செய்த தொழிலாளர்களை இரவு 8 மணிக்கு கைது செய்து 7 போலீஸ் லாரிகளில் ஏற்றிச் சென்றனர். கைதானவர்களில் ஐ கை நே. தொ. ச (சி ஐ டி யூ) தலைவர் கே அய்யாவு, எம். குருசாமி ஆகியோரும் தே கை. நெ தொ. ச (காங்கிரஸ்) தலைவர் பி. பட்டமுத்துவும் உள்ளனர்.

பின்னர் நடந்த தொழிலாளர் கூட்டத்தில் ஆண்களும், பெண்களும் ஆயிரக்கணக்கானோர் கலந்து கொண்டனர். கே. அங்கமுத்து. பி கல்யாணசுந்தரம் (சி ஐ டி. யூ), நடராஜன் (காங்கிரஸ்) ஆகியோர் பேசினார்.

### மோட்டாரக நெசவாளர் போராட்டம்

மதுரை நகரின் கிழக்குப் பகுதியில் மோட்டாரகத்தில் வேலை செய்யும் மதுரை நகர கைநெசவுத் தொழிலாளர்கள் சுமார் 2000 பேர் 25 சதவீத கூலி உயர்வு, 10 சதவீத போனஸ், சட்டப் பாதுகாப்பு ஆகிய கோரிக்கைகளை முன் வைத்து 29—3—72-ந் தேதி பிற்பகல் முதல் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள். அன்று மாலை நடைபெற்ற தொழிலாளர் கூட்டத்தில் இக்கோரிக்கைகள் நிறைவேறும்வரை தொடர்ந்து உறுதியாகப் போராடுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

இந்தப் போராட்டத்தை வழிநடத்திச்செல்ல 7 பேர் கொண்ட அனைத்துச் சங்கக் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

நமது சி ஐ டி யூ கூட்டம் சார்பில் தோழர் கே வாசுதேவன் போராடும் தொழிலாளர்களுக்கு இக்கூட்டத்தில் ஆதரவு தெரிவித்துப் பேசினார்.

## ஆப்பிரிக்க - ஆசிய ஸ்தாபனத்தில் பங்களா தேசம்

'கெய்ரோ, மார்ச் 31—
பங்களாதேசத்தை ஆப்பிரிக்க-ஆசிய மக்களின் ஐக்கிய ஸ்தாபனத்தில் உறுப்பினராக அனுமதிக்க அந்த ஸ்தாபனத்தின் செயலகம் இன்று அங்கீகாரம் அளித்துள்ளது.

கெய்ரோ மாநாட்டில் பார்வையாளராகக் கலந்து கொண்ட பங்களா தேச தூதுக்குழுவினர் தங்கள் நாட்டைஆசிய—ஆப்பிரிக்க மக்கள் ஸ்தாபனத்தில் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென வற்புறுத்தினர்.'

### பஸ் வரவேண்டுமென உண்ணுவிரதம் ஆர்ப்பாட்டம்

உத்தமபாளையம், மார்ச். 31 —
உத்தமபாளையம் வட்டத்திலுள்ள வெள்ளையம்மாள் புரத்திற்கு வந்துகொண்டிருந்த பஸ்களை திடீரென்று நிறுத்திவிட்டதால் பொது மக்கள் மிகவும் துன்பப்படுகின்றனர். ஓடைப்பட்டி, மூர்த்திநாயக்கன்பட்டி, சுக்காங்கலபட்டி ஆகிய பகுதிகளைச் சேர்ந்த மக்கள் மீண்டும் பஸ் விடும்படி கோரி போராடத் திட்டமிட்டுள்ளனர்.

### போராட்டம்

வெள்ளையம்மாள் புரத்திற்கு ஏற்கனவே வந்த பஸ்ஸை மீண்டும் விடவும், புதிய பஸ்களை அனுமதிக்கவும், ஏப் 15-ல் பெரியகுளம் சப் கலெக்டர் அலுவலகம் முன்பு ஒருநாள் உண்ணாவிரதமிருக்கவும் திட்டமிட்டுள்ளனர். தங்கள் கோரிக்கைகள் நிறைவேறாவிட்டால் ஏப்ரல் 16ல் ஓடைப்பட்டி வழியாக செல்லும் பஸ்களை நிறுத்தி வெள்ளையம்மாள்புரம் வழியாக செல்லவேண்டுமென பொதுமக்களும் சர்வகட்சியினரும் ஆர்ப்பாட்டம் நடத்துவார்கள்.

## ஒப்பந்தத்தை அமுல் நடத்தாமல் மில் முதலாளியின் சதி

### கோவையில் வேலைநிறுத்தம்

கோவை, மார்ச். 29 —
19அம்சக் கோரிக்கையை முன்வைத்து 1 மாத காலமாகப் போராடிம பெரும் வெற்றி பெற்ற பின்னும், தென்னிந்திய ஆலை அதிபர் சங்கத்தின் தலைவருடைய மில்லில் கார்டிங் டிபார்ட்மெண்டில் மெஷின் வேகத்தை அதிகப்படுத்தி, அப்பகுதி தொழிலாளர்கள் வேலைசெய்ய முடியாத அளவுக்கு நிர்ப்பந்திக்கப் பட்டு, 27—3—72 முதல் தவிர்க்க முடியாமல் அனைத்து சங்கத் தொழிலாளர்களும் வேலை நிறுத்தப் போராட்டம் செய்து வருகிறார்கள். இப்போராட்டத்திற்கு சி ஐ. டி. யூ. சங்கம் முன்னணியில் நின்று இப்போராட்டத்தை நடத்தி வருகிறது.

## விவசாயிகள் பேரவைக் கூட்டம்

பூந்தாழங்குடி, மார்ச். 30 —
பூந்தாழங்குடியில்விவசாயிகள் பேரவைக் கூட்டம் மார்ச் 28-ல் தோழர் வி வேலு தலைமையில் நடைபெற்றது. தஞ்சை மாவட்ட செயற்குழு உறுப்பினர் தோழர் ஏ. நடராசன் கலந்துகொண்டு 6—4—72-ந் தேதி தொடங்க இருக்கும் நில வெளியேற்ற எதிர்ப்பு பிரச்சார பாதயாத்திரையைப் பற்றி விளக்கமாகப் பேசினார்.

பாதயாத்திரையில் வரக்கூடிய தோழர்களுக்கு உணவளித்து, நிதியளித்து ஆதரவு தரவும் தீர்மானிக்கப்பட்டது. 10—4—72ந் தேதி மன்னை பொதுக் கூட்டத்திற்கு மாபெரும் அணிவகுப்பேடு வருவது என தீர்மானிக்கப்பட்டது. கூட்டம் இனிதாக முடிவுற்றது.

தீக்கதிர்

# ஏகபோக முதலாளிகளுக்கு இந்திரா அழைப்பு

பிரதம மந்திரி இந்திராவும் நிதியமைச்சர் சவானும் தொழில் வளர்ச்சிக்கு கூட்டுத்துறையை வலியுறுத்திப் பேசியுள்ளார்கள், தொழில் முயற்சியில் தனியார் துறையிலுள்ள நிர்வாகத் திறனையும் அரசு நிதி நிறுவனங்களிலுள்ள நிதியையும் பயன்படுத்துவதே கூட்டுத்துறை என்று நிதியமைச்சர் விளக்கம் தந்துள்ளார்.

ஏகபோக முதலாளிகளைக் கட்டுப்படுத்துவது அரசின் கொள்கையா அல்லது வளர்ப்பது அரசின் கொள்கையா என்ற சந்தேகத்துக்கே இடமின்றி ஏகபோக முதலாளிகளுக்கு அழைப்புவிடுத்து இந்திய தொழில் வர்த்தக சம்மேளனக் கூட்டத்தில் (மார்ச் 25-ல்) பிரதம மந்திரி பேசியிருக்கிறார்.

தற்காலிகக் கஷ்டங்களைப் பொருட்படுத்தாமல் தைரியமாக முதலீடு செய்ய வாருங்கள் என்று அந்தக் கூட்டத்தில் பிரதம மந்திரி அழைப்பு விடுத்துள்ளார்.

தீவிரமான கூட்டுத்துறை கொள்கையை வகுப்பதற்கு தொழிலதிபர்கள் உதவவேண்டும் என்றும் அவர் கேட்டுள்ளார்.

ஏகபோக வளர்ச்சியை அரசு கட்டுப்படுத்தாது என்பதைப் பிரதம மந்திரி கீழ்வருமாறு தெளிவாக்குகிறார்.

“பெரிய தொழில் நிறுவனங்களுக்கு ஆதார, பெரு முதலீட்டுத் துறையில் விரிவடைவதற்கான வாய்ப்பு இருக்கிறது. அரசு நிதி நிறுவனங்களிலிருந்து கணிசமான உதவியின்றி இந்தத் துறைகளை பெரிய தொழில் நிறுவனங்கள் வளர்ச்சியுறச் செய்ய முடியாது. அதனால் கூட்டுத்துறையை வகுத்துள்ளோம்” என்று கூறியுள்ளார்.

ஆதாரத் தொழில்களில் உற்பத்தியைப் பெருக்குவது அவசியம் என்றும் இல்லை விட்டால் அந்நிய “உதவி”யாளர்களின் விருப்பு வெறுப்புகளைச் சார்ந்து நிற்கும் நிலை நீடிக்கும் என்றும் இந்நிலையில் பெரிய தொழில் நிறுவனங்கள் முக்கிய பாத்திரம் வகிக்க முடியும் என்றும் பிரதம மந்திரி முதலாளிகள் கூட்டத்தில் பேசியுள்ளார்.

தொழில் துறையில் அரசு ஆதிக்க நிலை வகிக்கும் என்று வாயளவில் கூறி வந்த நிலை மாறி இப்போது ஏகபோக முதலாளிகளின் தொழில் முயற்சிகளுக்கு ஊக்கமும் நிதியுதவியும் அளிக்க அரசு தயாராக இருப்பதாகப் பிரதம மந்திரியே பறை சாற்றுகிறார்.

இந்த ஏகபோக முதலாளிகள் வளர்ச்சித் திட்டத்துக்குத்தான் கூட்டுத்துறை என்று பெயரிடப்பட்டுள்ளது.

சோஷலிசம் பேசும் அரசு ஏகபோக முதலாளிகளின் நிறுவனங்களை அரசுடமையாக்குவதற்குப்பதில் ஏகபோக முதலாளிகளை வெட்கமற்ற முறையில் வளர்க்கக் கிளம்பியுள்ளது.

கடந்த ஒருவருடத்தில் மட்டும் ஏகபோக முதலாளிகளுக்கு 97 புதிய லைசென்சுகள் கொடுக்கப்பட்டுள்ளன.

பாங்குப் பணத்தில் 23 சதவிகிதம்தான் சிறிய தொழில்களுக்குக் கடனாகப் போகிறது என்றும் 77 சதவிகிதம் பெரிய தொழில் நிறுவனங்களுக்குப் போகிறதென்றும் நிதியமைச்சரே நாடாளுமன்றத்தில் ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கையில் கூறியுள்ளார்.

பாங்குகளைத் தேசிய உடைமையாக்குவதையே சோஷலிச நடவடிக்கையாக வர்ணித்து இந்திரா காங்கிரசும் அதற்கு வால்பிடிக்கும் கட்சிகளும் ஓட்டு வேட்டையாடின

தேசிய மயமாக்கப்பட்ட பாங்குகளின் பணம் முன்போலவே ஏகபோக முதலாளிகளுக்குத்தான் பயன்படுகிறது.

சோஷலிசம் பேசும் இந்திரா அரசு எக்சைஸ் வரி மூலம் மக்களிடமிருந்து ரூ. 2500 கோடி வசூலிக்கும்போது முதலாளிகளிடமிருந்து நேரடி வரி மூலமும், செல்வ வரி மூலமும் அற்ப சொற்ப வருமானமே பெறுகிறது.

ஏகபோக முதலாளிகளைக் கட்டுப்படுத்தும் நடவடிக்கையாக ஒரு சில ஏகபோக நிறுவனங்களைக்கூட இந்திய அரசு அரசுடமையாக்கவில்லை.

அதற்குப்பதில் இந்திய தொழில், வர்த்தக சம்மேளனக் கூட்டத்தில் பேசியுள்ள பிரதமர் இந்திரா, ஏகபோக முதலாளிகளை ஆதாரத் தொழில்களில் முதலீடு செய்யுமாறு அழைத்திருக்கிறார்.



# தேர்தல்மோசடியை நாடெங்கும் அம்பலப்படுத்துவோம்

## தோழர் ஜோதிபாசு முழக்கம்

கல்கத்தா, மார்ச். 30 — நாடு பாசிசத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது என்றும். இந்நிலையில நாடாளுமன்ற ஜனநாயக முறையைக்காக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது என்றும் தோழர் ஜோதிபாசு எச்சரித்தார்.

சாகித்மினர் மைதானத்தில் இடதுசாரி முன்னணி சார்பில் மார்ச் 28-ம் தேதி நடைபெற்ற பிரம்மாண்டமான பொதுக்கூட்டத்தில் தோழர் ஜோதிபாசு பேசினார்.

தோழர் ஜோதிபாசுவின் பேச்சு வருமாறு:—

சமீபத்தில் நடைபெற்ற தேர்தல் மோசடியானது. இதை மக்களுக்கு விளக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. மேற்கு வங்கத் தேர்தலின் “உண்மையான படப்பிடிப்பை” தங்கள் முன் வைப்பதற்காக இடதுசாரி முன்னணி தலைவர்கள் நாடெங்கும் சுற்றுப்பயணம் செய்வார்கள்.

### சட்டமன்ற பகிஷ்கரிப்பு ஏன்?

தேர்தல் நேர்மையான முறையிலும் சுதந்திரமாகவும் நடைபெற்றிருந்தால் மக்களுடைய தீர்ப்பை ஏற்றுக்கொண்டு சட்டமன்றத்தில் எதிர்க்கட்சி வரிசையில் அமருவதற்கு தடையில்லை.

இந்தத் தேர்தல் மோசடியான முறையில் நடைபெற்றிருப்பதால் தான் சட்டமன்றத்தை நாம் பகிஷ்கரித்து வருகிறோம்.

280-தொகுதிகளில் 200 தொகுதிகளில் மோசடி செய்யப்பட்டிருக்கிறது 60 தொகுதிகளில் வாக்காளர்கள் ஓட்டுப் போட முடியாதவாறு தடுக்கப்பட்டுள்ளனர். 200 தொகுதிகளிலும் போலி ஓட்டுகள் போடப்பட்டுள்ளன, அல்லது ஓட்டுப் பெட்டிகள் மாற்றப்பட்டுள்ளன, அல்லது ஓட்டு பெட்டிகள் உடைக்கப்பட்டுள்ளன. ஓட்டுச் சீட்டுகள் செல்லாதவைகளாக ஆக்கப்பட்டுள்ளன.

பாரா நகர் தொகுதியில் (ஜோதிபாசு போட்டியிட்ட தொகுதி) 133 வாக்குச் சாவடிகளில் பகல் 1 மணிக்குள்ளாகவே 99 ஆயிரம் ஓட்டுகள் போடப்பட்டுள்ளன.



ஜோதிபாசு

தேர்தலுக்குப் பின்னரும் இது வரை 30 பேர் கொல்லப்பட்டுள்ளனர் என்று தோழர் ஜோதிபாசு விளக்கினார்.

இந்தக் கூட்டத்தில் சுதின் குமார் (புரட்சி கம்யூனிஸ்ட் கட்சி) நிகில்தாஸ் (ஆர்: எஸ். பி) சுபோத்பானர்ஜி (எஸ் யூ சி.) ஜே திபட்டாச்சாரியா (தொழிலாளர் கட்சி) ஆகியோரும் பேசினர்.

மேற்கு வங்கத்தில் ஜனநாயகம் அழிக்கப்பட்டிருப்பதை எதிர்த்துக் குரல் எழுப்புமாறு ஜனநாயக நெறியைப் போற்றுவோர் அனைவரையும் கேட்டுக் கொள்ளும் தீர்மானம் ஒன்றும் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது.

## கேரள இளைஞர் சங்கக் கொடியேற்றுவிழா

மூணாறு, மார்ச் 30— கேரள சோசலிஸ்ட் இளைஞர் சங்கத்தின் கொடியேற்று விழா, 29-ம் தேதியன்று இங்கு நடைபெற்றது விழாவுக்கு. இடுக்கி மாவட்டக் குழுத் தோழரான ஏ ஏ வஹப் தலைமை வகித்தார் சங்கத் தலைவர் தோழர் ஏ வின்சென்ட் கொடியேற்றிவைத்தார். டி இ. இ யூனியன் தோழரான வி. ஆறுமுகம் வரவேற்புரை நிகழ்த்தினர்.

தோழர்கள் எஸ் சூசை மாணிக்கம், எஸ்.பாலராஜ் எம் மோசஸ், வின்செண்ட் ஜார்ஜ் ராஜகோபாலன் ஆகியோர் பேசினர்.

ஆளும் காங்கிரசின் மக்கள் விரோத பாசிசப் போக்கை எதிர்த்தும், கேரள சோசலிஸ்ட் இளைஞர் சங்கத்தின் லட்சியம் குறித்து விளக்கியும் பேசினர்,

(த நி.)

மன்னார்குடி தாலுகாவில்

## பேரவைக் கூட்டங்கள்

மன்னார்குடி, மார்ச். 30— தேவங்குடியில் தேவங்குடி கீழாளவந்தசேரி மேலாளவந்தசேரி, இம்மூன்று கிளைகளைக் கொண்ட விவசாயிகள் விவசாய, தொழிலாளர்கள் சங்கங்களின் பேரவைக் கூட்டம் மார்ச் 28ம் தேதி டி. கோதண்டம் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் மன்னை தாலுகா விவசாயிகள் சங்கத்தலைவர் தோழர் பி. வெங்கடேசன் மன்னை தாலுகா மாணவர் சங்க செயலாளர் தோழர் வே. சாம்பமூர்த்தி கலந்துகொண்டு தமிழ்நாடு விவசாயிசங்க முடிவுப்படி 15 அம்ச கோரிக்கைகளைப் பற்றியும், நிலவெளியேற்ற எதிர்ப்புப் பிரச்சார பாதயாத்திரையைப் பற்றியும், விளக்கமாக உரையாற்றினார்கள். கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### கலைநிகழ்ச்சி பொதுக்கூட்டம்

6—4—72-ந் தேதி தொடங்க இருக்கும் பாதயாத்திரைக் குழுவிற்கு உண்டியலில் ஒவ்வொரு தோழர்களும் ஆண் பெண் அனைவரும் குறைந்த அளவு 28 காசு போடுவது என்றும் முடிவு செய்யப்பட்டது.

7—4—72-ந் தேதி பாதயாத்திரைக் குழுவிற்கு இரவு உணவு 8-ந் தேதி காலை உணவும், கீழத்தொட்டியில் ஏற்பாடு செய்வது என்றும் முடிவு செய்யப்பட்டது.

7—4—72-ந் தேதி இரவு அரிச்சபுரத்தில் கலைநிகழ்ச்சியுடன் கூடிய பொதுக்கூட்டம் தேவங்குடி. கீழாளவந்தசேரி, மேலாளவந்தசேரி மூன்று கிளைகளும் சேர்ந்து நடத்துவது என முடிவு செய்யப்பட்டது,

10—4—72-ந் தேதி மன்னார்குடியில் நடைபெற இருக்கும் பொதுக்கூட்டத்திற்கு அணிஅணியாக ஆண்களும், பெண்களும் திரட்டுவது என முடிவுசெய்யப்பட்டது.

# தென் ஆற்காடு மாவட்ட மெங்கும் விவசாயிகளின் பேரணி

## மாவட்ட விவசாயிகள் சங்க கூட்ட முடிவுகள்

விருத்தாசலம் மார்ச், 30— தென் ஆற்காடு மாவட்ட விவசாயக் கமிட்டிக் கூட்டம் விருத்தாசலத்தில் சங்க தலைவர் தோழர் டி ஆர். விஸ்வநாதன் தலைமையில் மார்ச் 16-ல் கூடியது.

மாயவரத்தில் நடந்து முடிந்துள்ள மாநில விவசாய சங்க கமிட்டி முடிவுகளை விளக்கி தோழர் டி. ஆர். விசுவநாதன் ரிப்போர்ட் செய்தார் கடந்த கால வேலை அறிக்கைகளை செயலாளர் என். ஆர் ராமசாமி ரிப்போர்ட் செய்தார். எதிர்கால வேலைத் திட்டங்களையும், தீர்மானங்களையும் கமிட்டி முடிவு செய்துள்ளது.

எப். 13-ம் தேதிக்குள் 8 ஆயிரம் சந்தா போட்டு முடித்துவிடுவது. மாவட்டம் பூராவும் மாநில விவசாயிகள் சங்க முடிவுகளை விளக்கி சைக்கிள் பிரச்சார குழுவாக நடத்துவது எனவும், 30 பொதுக் கூட்டங்கள் நடத்துவது 30 ஆயிரம் துண்டுபிரசுரங்கள் வெளியிடுவது, ஏப். 20-ம் தேதி மாவட்ட வட்ட ஆட்சித் தலைவர்களிடம் மகஜர் சமர்ப்பிப்பது எனவும் முடிவுசெய்யப்பட்டது.

### தீர்மானங்கள்

ஃ மாவட்ட வி. ச. தலைவர் டி. ஆர். விஸ்வநாதனிடம் தரக்குறைவாக நடந்து கொண்ட போலீஸ் சூப்ரண்டை மாற்றல் செய்திருப்பது போதாது சஸ்பெண்ட் செய்து விசாரணை செய்ய கேட்டுக்கொள்கிறது.

ஃ நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலைத் தொழிலாளர் போராட்டத்தை ஆதரித்தும், ஒற்றுமையுடன், உறுதியுடன் போராடிவரும் தொழிலாளர்களை பாராட்டியும், உடன்சர்க்கார் தலையிட்டு போராடும் தொழிலாளர்களுக்கு நியாயம் கிடைக்க வேண்டுமெனக் கூட்டம் கோருகிறது.

ஃ மாநில வி. ச. முடிவுகளை தமிழக அரசு நிறைவேற்ற உடனே முன்வர வேண்டுமெனக் கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

மன்னையில்

## சுதந்திர போராட்ட வீரர்கள் கூட்டம்

மன்னார்குடி மார்ச் 30 — மன்னையில் மார்ச் 21-ல் தஞ்சை தாலுகாவைச் சேர்ந்த சுதந்திர போராட்ட வீரர்கள் கூட்டம் எம். ஜி திருவேங்கட நாயுடு தலைமையில் நடைபெற்றது.

இக் கூட்டத்தில் சர்வகட்சியினரும் கலந்துகொண்டனர். ஏப்ரல் மாதம் நடக்கும் மாநாட்டிற்கு எம் எல் ஏ, எம் பி.க்களை அழைப்பதென்றும், மத்திய அரசு. போராட்ட வீரர்களுக்கு அளித்துவரும் பென்ஷன் திட்டத்தை வரவேற்றும், மாநாட்டை நல்லமுறையில் நடத்துவதற்கு வரவேற்பு கமிட்டியும் அமைக்கப்பட்டது.

தலைவராக சாமிநாத செட்டியார், காரியதரிசியாக நடராஜனும், பொருளாராக பி பட்டுப்பிள்ளையும் மேலும் பல அங்கத்தினர்களும் கொண்டகமிட்டி அமைக்கப்பட்டது.

# குடியாத்தம் மில்லில் ஷிப்டை மூட வேண்டாம்

## நிர்வாகத்துக்கு தொழிலாளர் சங்கம் கடிதம்

குடியாத்தம், மார்ச் 19— குடியாத்தம் திருமகள் மில்லில் ஒரு ஷிப்டை மூடப் போவதாக நிர்வாகம் அறிவித்திருப்பதை நிறுத்தக் கோரி வட ஆற்காடு மாவட்ட மில் தொழிலாளர் சங்கம மார்ச் 24-ல் கடிதம் எழுதியுள்ளது.

ஒரு ஷிப்டை மூடுவதால் தொழிலாளர்கள் வேலை இழக்கும் நிலைமை ஏற்படும் என்றும், இந்தநடவடிக்கை மார்ச் 9-ம் தேதி ஒப்பந்தத்துக்கு முரணானது என்றும் அந்தக்கடிதத்தில் கூறப்பட்டுள்ளது.

நூல் தேக்கம் சம்பந்தமாக மத்திய, மாநில அரசுகளுடன் பேச்சுநடத்துமாறும், ஷிப்டைமூடும் திட்டத்தைக் கைவிடுமாறும் மில் தொழிலாளர் சங்கம் கேட்டுக் கொண்டுள்ளது.

மன்னை தாலுகா

## பிரச்சார பாத யாத்திரை ஏற்பாடுகள்

மன்னார்குடி, மார்ச். 29— மன்னார்குடி தாலுகாவில் நில வெளியேற்றத்தைத் தடைசெய்ய கோரி பிரச்சார பாத யாத்திரைக்கு தயாரிப்புகள் செய்யப்படுகின்றன.

இதை யொட்டி பேரவை கூட்டங்கள் நடைபெற்றன.

மார்ச் 25-ல் பள்ளக் கொல்லையில் தோழர் எம். சண்முகம் தலைமையில் பேரவைக் கூட்டம் நடைபெற்றது சி.எம் பி ஏரியா பகுதி தோழர்கள் பங்கு கொண்டனர்.

மார்ச் 25-ல் ராதாநரசிம்மபுரத்தில் பேரவைக் கூட்டம் நடைபெற்றது. ஆ வ. காத்தமுத்து தலைமை தாங்கினர்.

மார்ச் 26-ல் தலையாமங்கலத்தில் தோழர் கே. பட்டுராசு தலைமையில் பேரவை கூட்டம் நடைபெற்றது.

மார்ச் 27-ல் கோட்டூரில் தோழர் ஆர். வேலு தலைமையில் பேரவைக் கூட்டம் நடைபெற்றது. பேரவைக் கூட்டங்களில் கட்சி உறுப்பினர்களும், விவசாய சங்க விவசாயத் தொழிலாளர் சங்க உறுப்பினர்களும் கலந்து கொண்டார்கள்.

பிரச்சார பாதயாத்திரை நோக்கங்களையும் 16 அம்ச கோரிக்கைகளையும் விளக்கி தோழர்கள் ஏ. நடராஜன் சி. கோவிந்தன், பி வெங்கடேசன், கே. பட்டுராசு, எஸ். தங்கராசு, கே,சீனிவாசன் பேசினர்கள்.

ஏப்ரல் 6-ல் சித்தமரையூரில் இருந்து புறப்படும் பாதயாத்திரைக்கும், ஏப்ரல் 6ல் கீழமணலியிலிருந்து புறப்படும் பாதயாத்திரைக்கும் ஏப்ரல் 7ல் பரவாக்கோட்டையிலிருந்து புறப்படும் பாதயாத்திரைக்கும் தோழர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பாதயாத்திரை இயக்கத்தை யொட்டி பொதுக் கூட்டங்கள் நடத்தவும், பாதயாத்திரை தோழர்களுக்கு உணவு அளித்து வரவேற்புகள் கொடுக்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

## திருவேங்கடம் என். ஜி ஓ. சங்க கிளை துவக்கம்

திருவேங்கடம், மார்ச் 29— தமிழ்நாடு அரசிதழ் பதிவுறு அலுவலர் சங்கம் (என் ஜி ஜி ஓ யூனியன்) திருவேங்கடம் கிளையின் துவக்க விழாப் பொதுக் கூட்டம் மார்ச் 20-ல் திருவேங்கடம் ஊராட்சி ஒன்றிய ஆரம்பப் பள்ளியில் திரு. குருசாமி தலைமையில் நடைபெற்றது.

கீழ்க்கண்டவர்கள் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவராக குருசாமியும், உப தலைவராக கிருட்டிணசாமியும், செயலாளராக இ முத்தையாவும், இணைச் செயலாளராக சுப்பிரமணியமும், பொருளாளராக சுப்பிரமணியமும், மாவட்ட பிரதிநிதியாக ஏ. இராமசாமியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

சங்க கிளையின் அவசியம் குறித்தும் மேலும் தீவிரமாக ஆற்றவேண்டிய பணிகள் குறித்தும் திரு. கருப்பையா சிறப்பு சொற்பொழிவாற்றினர்.




## கள்ள மார்க்கெட்டில் விற்பவர்களுக்கா பட்டு வழங்குவது?

ஐயா,

மாஸ்டர் வீவர்கள் தாங்கள் சங்கம் அமைத்துக் கொண்டு, அதன்மூலம் பட்டுக்கேட்டால், அதற்கு எந்தவிதியும் இல்லாமலும், தறிகளை நேரில் வந்து பார்க்காமலும், ஹாண்ட்லூம் போர்டு அதிகாரியும் டி. சி ஓ வும் அவர்களுக்கு பட்டுக்கான “அலாட்மெண்ட்” கொடுத்துவிடுகிறார்கள்.

இதனால், கூலிநெசவாளர்களுக்கோ, பஜார் நெசவுத் தொழிலாளர்களுக்கோ எவ்விதப் பயனும் ஏற்படுவதில்லை. அதற்குப் பதிலாக அவர்கள் மேலும் அல்லல்பட்டு தெருவில் அலையும் அவலநிலைதான் வளர்கிறது. ‘அலாட்மெண்ட்’ மூலம் தாங்கள் பெறும் பட்டை மாஸ்டர் வீவர்கள் அப்படியே பிளாக் மார்க்கெட்டில் விற்றுவிடுகிறார்கள்.

எனவே, கொழுத்த வருவாய் தேடும் கெட்ட நோக்குடன் பட்டை கள்ள மார்க்கெட்டில் விற்கும் மாஸ்டர் வீவர்களுக்கு அலாட்மெண்ட் செய்து வருவதை நிறுத்திவிட்டு, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கஷ்டப்படும் ஒவ்வொரு நெசவாளிக்கும் கார்டு மூலம் பட்டு சப்ளை செய்ய முன்வரவேண்டுகிறேன்.

இப்படிக்கு,
ச. சவுண்டையா,
சின்னாளப்பட்டி.

## சிறு திட்டங்களுக்கு வழங்கப்பட்ட பணம் செலவிடப்படவே இல்லை

நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சுமார் 100 புதிய திட்டங்களுக்காக ரூ 1190 கோடி ஒதுக்கப்பட்டது.

ஆனால் நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் செயல்பட ஆரம்பித்த மூன்றாண்டுகளுக்குப் பின்னர் இதுவரை இத்திட்டங்களின் மூலம் 180 கோடி ரூபாய்தான் செலவிடப்பட்டுள்ளது. அதாவது மொத்த தொகையில் 15 சதமானம்தான் செலவிடப்பட்டுள்ளது

உதாரணமாக, சிறு விவசாயிகளுக்கு ஒதுக்கப்பட்ட 67கோடியே 50 லட்சம் ரூபாயில் இது வரை 3 கோடிரூபாய்தான் செலவிடப்பட்டுள்ளது.

இதைவிட படுமோசம், நடுத்தர விவசாயிகளின் நிலை அவர்களுக்கு திட்டத்தில் ஒதுக்கப்பட்ட 41.5 கோடி ரூபாயில் இதுவரை 1 கோடி ரூபாய்தான செலவிடப்பட்டுள்ளது.

—“ டைம்ஸ் ஆப் இந்தியா” மார்ச் 15

# இரு வேறு உலகின் பொருளாதாரப் போட்டி

சோவியத் யூனியனில் சென்ற 1971-ம் ஆண்டில் தொழில்துறை உற்பத்தி 6.9 சதவிகிதம் அதிகரிக்க வேண்டும் என்று திட்டமிடப்பட்டிருந்தது. ஆயினும் ஆண்டு முடிவிலோ இந்த உற்பத்தி திட்ட இலக்கையும் தாண்டி 7.8 சதவிகிதத்தை எட்டிப் பிடித்துவிட்டது.

அதே சமயத்தில் அமெரிக்கா, இங்கிலாந்து, மேற்கு ஜெர்மனி முதலிய மேலை நாடுகளில், சமீப ஆண்டுகளில் மிகத் தீவிரமாக அபிவிருத்தி கண்டு வந்துள்ள ஜப்பான் முதலிய நாடுகளின் நிலை என்ன? இந்த நாடுகளிலெல்லாம் தொழில் உற்பத்தியின் வேகம் சென்ற ஆண்டில் வெகுவாகக் குறைந்துவிட்டது என்பதை அந்நாட்டுப் பொருளாதார நிபுணர்களே ஒத்துக்கொண்டுள்ளனர்.

மேலும் பல முக்கியமான தொழில் துறைகளின் வளர்ச்சியிலும் சென்ற ஆண்டில் தேக்கம் நிலவியது. 1970-ல் அமெரிக்காவில் தொழில் துறை உற்பத்தி 3 சதவிகிதம் குறைந்தது. 1971-ல் 0.4 சதவிகிதம் குறைந்தது. எனவே இதனை அமெரிக்கா ஒரு "வெற்றி" என்று கூறி மார்தட்டிக் கொள்கிறது.

## உருக்கு உற்பத்தியில்

உதாரணமாக, உலோகத் தொழில் என்ற முக்கியமான தொழில் துறையை எடுத்துக் கொள்வோம். சோவியத் யூனியனில் 1971-இல் 12.1 கோடி டன் உருக்கு உருக்கப்பட்டது. அமெரிக்க நாட்டின் நிலுவில் பத்திரிகை இந்த உற்பத்தியை 13.3 கோடி டன் என்றே கணக்கிட்டுள்ளது. ஆனால் அமெரிக்காவிலோ இதே துறையில் சென்ற ஆண்டில் உற்பத்திப்பெருக்கம் குறைந்துவிட்டது. சென்ற ஆண்டில் அங்கு 12 கோடி டன் உருக்கே உருக்கப்பட்டது. சென்ற ஆண்டில் மேற்கு ஜெர்மனியிலும் இந்த உற்பத்தி ஐந்தில் ஒரு பகுதி குறைந்தது. ஜப்பானிலோ 1970-ம் ஆண்டில் இருந்ததைக் காட்டிலும் 1971-ல் 50 லட்சம் டன் குறைந்து விட்டது.

## உழைப்பின் உற்பத்தித்திறன்

உழைப்பின் உற்பத்தித் திறன் அதிகரிப்பு விஷயத்தில் சோவியத் யூனியன் தான் முதலிடம் வகிக்கிறது. நமது உலகிலுள்ள வேறுபட்ட இரு சமுதாய முறைகளுக்கிடையே நடைபெற்று வரும் பொருளாதாரப் போட்டியில் இந்த அதிகரிப்பே மிக அம்சமாக விளங்குகிறது. 1971-75 ஆண்டுகளில் சோவியத் நாட்டில் உழைப்பின் உற்பத்தித் திறன் திட்டத்தில் 39 சதவிகிதம் அதிகரித்து வருகிறது; அதாவது மொத்த உற்பத்தியிலும் ஒவ்வொரு சதவிகிதமும் 37 லட்சம் ரூபிளுக்குச் சமமாகும் என்பது. கடந்த எட்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் ஏற்பட்ட அதிகரிப்பின் ஒவ்வொரு சதவிகிதத்தைக் காட்டிலும் 1.6 மடங்கு அதிகம் என்பதுதான் இதன் பொருள்.

## எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர்

இந்த இருவேறு சமுதாய அமைப்புக்களிடையே நடைபெற்றுவரும் போட்டி எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர் எந்திரங்களை உற்பத்தி செய்யும், அந்த உத்திகளைப் பயன்படுத்தும் துறையிலும் நடைபெற்று வருகிறது.

அறுபதாம் ஆண்டுகளின் போது உலகில் விற்பனையான பெரும்பாலான எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர்களில் 'அமெரிக்காவில் செய்தது' என்ற முத்திரையே காணப்பட்டது. இப்போதோ சோவியத் யூனியன் பல புதுமையான எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர் எந்திரங்களை உலகில் ஏராளமாக விற்பனை செய்து வருகிறது. மேலும் மூன்றாவது தலைமுறையான வாணிக்கப்படும் இந்தப் புதிய எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர்களை அண்மையில் அரசாங்க கமிஷனும் அங்கீகரித்துள்ளது. அவை அமெரிக்காவில் தயாரிக்கப்பட்ட முதல்தரமான எந்திரங்களுக்குச் சமமாக இருப்பதோடு மட்டுமல்லாது, சில அம்சங்களில் அமெரிக்க எந்திரங்களின் தரத்தையும் திறனையும் மிஞ்சி விடுகின்றன.

## பெரிய கலை

ஹார்வர்டு பல்கலைக் கழகப் பேராசிரியரும், பிரபல அமெரிக்கப் பொருளாதார நிபுணரும், சமூக வியல் நிபுணருமான வி. லியான்டிபேவ் கம்யூனிச அனுதாபியல்ல; சோவியத் சமுதாய அமைப்பை ஏற்றுக்கொள்பவரும் அல்ல. ஆயினும் அவரே அண்மையில் தேசப் பொருளாதார வளர்ச்சிக்கென ஓர் சிக்கலான அரசாங்கத் திட்டத்தை வகுத்துச் செயல்படுவது என்பது ஒரு பெரிய கலைதான் என்பதில் சந்தேகமில்லை என்று சோவியத்திட்டத்தைப் பற்றிக் கூறியிருக்கிறார்.

---

### தி. மு. க. -- ஏ. ஐ. டி. யூ. சி. சங்கங்கள் செய்த

# ஒப்பந்தத்தின் லட்சணம்

## போராடும் சர்க்கரை ஆலைத் தொழிற் சங்கங்களின் கண்டனம்

நெல்லிக்குப்பம், மார்ச். 30—

போராடும் சர்க்கரை ஆலை தொழிற் சங்கப் பிரதிநிதிகளின் கூட்டம் மார்ச் 23-ம் தேதி இங்கு நடைபெற்றது. அந்தக் கூட்டத்தில் ஊதிய விகிதம் சம்பந்தமாக இயற்றப்பட்ட தீர்மானத்தை இங்கு பிரசுரிக்கிறோம்.

(தி.மு.க, ஏ.ஐ.டி.யூ.சி. சங்கங்கள் செய்த துரோகத்தைக் கண்டிக்கும் தீர்மானம் நேற்று பிரசுரிக்கப்பட்டிருந்தது.)

தமிழக சர்க்கரை ஆலையில் உழைக்கும் தொழிலாளிகளின், சிப்பந்திகளின் அடிப்படைக் கோரிக்கைகளின் பேரில் 25—2—72ந் தேதி தமிழக அரசின் சார்பில் தொழிலாளர் நல அமைச்சர் வைத்துள்ள பைசல் ஒப்பந்தத்தை இக்கூட்டம் பரிசீலித்தது.

தொழிலாளர்கள், சிப்பந்திகள் சார்பாக வைக்கப்பட்டுள்ள அடிப்படை ஊதிய ஸ்கேலையும், பஞ்சப்படி உயர்வு கோரிக்கையையும் சர்வீஸ் வெயிட்டேஜையும், தமிழக அரசு முழுக்க நிராகரித்துள்ளது முதலாளிகள் கோரிய—முதலாளிகளுக்கு சாதகமாக உள்ள—ஐந்து தொழிலாளர்களும் 1969 ஆண்டுமுதல் நிராகரித்ததுமான—ஊதியக் குழு ஸ்கேலையும் பஞ்சப்படியையும் தமிழக அரசு தொழிலாளிகள் மீது நிர்ப்பந்தமாக திணித்துள்ளார்கள். அரசு சிபார்சு செய்ததாக கூறப்படும் ரூ 10யும் சம்பளத்துடனே, பஞ்சப்படியுடனோ, பிராவிடண்டு பண்டு பிடிப்பதற்கோ, போனஸ், சம்பளத்துடன் விடுமுறை, லீவு சம்பளம், ஓவர்டைம் போன்றவைகளுக்கு இந்த 10 ரூபாய் சம்பளமாக கருதப்படமாட்டாதாம். ஆனால் தொழிலாளி சம்பளமில்லாத லீவில் சென்றால் அதிலிருந்த ஈவுதொகை பிடிக்கப்படுமாம். சுருங்கச்சொன்னால் ஊதியக் குழுவின், முதலாளிகளுக்குச் சாதகமான சம்பளம் பஞ்சப்படி பரிந்துரைகளை ஏற்கச்செய்ய, தமிழக அரசு சிபார்சு செய்த லஞ்சம் தான் இந்த 10 ரூபாய் என இக்கூட்டம் கருதுகிறது.

### தமிழக அரசின் வள்ளல் தன்மை!

அண்ஸ்கில்டு தொழிலாளிகளுக்கு வேலை இல்லா கால அலவன்ஸ் கொடுப்பது என்ற முடிவுக்கு வந்த பிறகு தற்பொழுது சர்க்கரைதொழிலில் நிலவிவரும் ரீடைனிங் அலவன்சை கூட (அதாவது 25%) தமிழக அரசு சிபாரிசு செய்ய மறுத்து விட்டது பிரதி மாதம் தலா ஒன்றுக்கு ரூ 14—00தான் சிபார்சு செய்துள்ளது.

நாட்டில் தனியார்துறை கூட்டுறவு துறை, சர்க்கரை ஆலைகள் சிலவற்றில் வீட்டுவாடகை அலவன்ஸ் கொடுத்து வரும் நிலையில் அதை மற்ற சர்க்கரை ஆலை தொழிலாளிகளுக்கு சிபார்சு செய்ய தமிழக அரசு மறுத்துள்ளது. முதலாளிகள் தொழிலாளிகளிடமிருந்து பிடிக்க வேண்டிய தொகையை 1—11—69-ல் இருந்து, பிடிக்கலாம் என்று முதலாளிகளுக்கு அனுமதி அளித்தது தமிழக அரசு.

### முதலாளிகளின் யோசனையை அப்படியே ஏற்பதா?

முதலாளி கொடுக்கவேண்டிய ரூபாய் 10-யும், ரீடெயினிங் அலவன்ஸையும இரவு அலவன்ஸையும் 1—3—72 லிருந்து கொடுத்தால் போதுமென பரிந்துரைத்துள்ளது. சர்க்கரை தொழிலாளிகளின் ஜீவாதாரமான பிரச்னைகளில் தமிழக அரசு எந்த அளவு பொறுப்பற்ற முறையில் நடந்துள்ளது என்பது போனஸ் தொழிலாளிகளுக்கு வேலைக்கான முழுச் சம்பளம், கேன் பீல்டு ஸ்டாப்பிற்கு பீல்டு அலவன்ஸ் போன்ற முக்கிய கோரிக்கைகளில் முடிவுகூட சொல்ல விட்டுவிட்டதிலிருந்து தெளிவு. கடந்த 20, 30 ஆண்டுகளில் புகளூர், நெல்லிக்குப்பம் தொழிலாளர்கள் போராடி பெற்ற கடலூர் திருச்சி, புள்ளிகளுடன் இணைக்கப்பட்ட பஞ்சப்படி முறையை ஒழித்துக்கட்ட பாரி கம்பெனி முதலாளி சொன்ன யோசனையை தமிழக அரசு ஏற்றுக்கொண்டு அப்படியே ஒப்பந்தத்தில் சேர்த்துவிட்டது.

இந்த சலுகையை வாபஸ் பெறமுடியாது என முதலாளிகளுக்கே தெரியும். பிறகு பாரி முதலாளி கைவிட்டதிலிருந்து வெளியாகிறது. அது தொழிலாளியிடம் பேரத்திற்கு முதலாளி வைத்த முதல் யோசனை என்பது ஊர்ஜிதம் ஆகிறது ஆனால் பேரத்திற்கு முதலாளி வைத்த தொழிலாளர் விரோத யோசனைகூட தமிழக அரசு தனது சொந்த பரிந்துரையாக ஒப்பந்தத்தில் முன் வைத்துள்ளது என்பதிலிருந்து தமிழக அரசு எந்த அளவு சர்க்கரை ஆலை அதிபர்களுக்கு பரிந்துரைத்துள்ளது என்பது தெளிவு.

முடிவு செய்துள்ளபடி பொது வேலை நிறுத்தம் நடந்தால் அதிகபட்ச சலுகைகள் கொடுக்க சர்க்கரை ஆலை அதிபர்கள் நிர்ப்பந்திக்கப்படுவார்கள் என்று தமிழக அரசு முதலாளிகளை அந்நிலையிலிருந்து தப்ப சில சலுகைகளை காட்டியும் தமிழக அரசு முதலாளிகளின் அரசியல் செல்வாக்கை பயன்படுத்தியும், தொழிலாளி ஒற்றுமையை குலைத்து வேலை நிறுத்தம் அணியிலிருந்து பிரித்து, தொழிலாளிகளின் அடிப்படைக் கோரிக்கைகளை தோற்கடிக்கச் செய்த, சாகசமாகவே அரசாங்கத்தின் பரிந்துரைகளைப்பற்றி இக்கூட்டம் கருதுகிறது.

தமிழக அரசின் தொழிலாளர் பரிந்துரைகளையும், அதன்படி செயல்படுள்ள ஒப்பந்தத்தையும் இக்கூட்டம் வன்மையாக கண்டிப்பதுடன் அவற்றை நிராகரிக்கிறது.

அத்துடன் தொழிலாளர்களின் அடிப்படை கோரிக்கைகள் மீது புதிதாக மீண்டும் பேச்சு வார்த்தைகளை துவக்கி நியாயமான தீர்வு ஏற்படுத்த வேண்டுமென இக்கூட்டம் தமிழக அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறது.

(ந நி)

---

### 30 அமைச்சரவைகளை கவிழ்த்த

# காங்கிரசிடம் தி. மு. க. எச்சரிக்கையாக இருக்கவேண்டும்

## சிறுமுகைக் கூட்டத்தில் தோழர் கே. ரமணி அறிவுறுத்தல்

சிறுமுகை, மார்ச், 30—

இந்திராவின் ஆட்சியில் இதுவரை 30மந்திரிசபைகள் கவிழ்க்கப்பட்டிருக்கின்றன என்றும், இந்திரா அரசு, ஹிட்லரின் தம்பியாக மாறிவருகிறது என்றும் இதிலிருந்து தி. மு. க. அரசு பாடம் பெற்று, மக்களுக்காக—விவசாயிகளுக்காக—தொழிலாளர்களுக்காக முன்னிற்க வேண்டுமென்றும், தவறினால் அதன் விளைவுகளைச் சந்திக்க நேரிடும் என்றும் தோழர் கே.ரமணி எச்சரித்தார்.

அவர் மேலும் பேசியதாவது.—

கோவை பஞ்சாலைத் தொழிலாளர் போராட்டம் தமிழகத் தொழிலாளிகளுக்கு புதிய அனுபவங்களைத் தந்துள்ளது பல ஆண்டுகளாக முதலாளிகளாலும் தொழிற் சங்கக் கைக்கூலிகளாலும் பிளவுபட்டிருந்த தொழிலாளர்கள் ஒரணியில் திரண்டனர். அதன் பலனாக சம்பளக் கமிஷன் தீர்ப்பையும், துரோக ஒப்பந்தங்களையும் உடைத்தெறிந்து நல்ல பல கோரிக்கைகளை வென்றெடுத்துள்ளனர். தமிழகத் தொழில்களிலே அதிக போனஸ் பெற்றவர்கள் கோவை பஞ்சாலைத்தொழிலாளிகள். 6, 7 மாத போனஸ் பெற்றவர்கள் $\frac{1}{2}$ மாத போனஸ் பெறும் படியாயிற்று. அதனை எதிர்த்து 71-ம் வருட இறுதியில் சி. ஐ. டி. யூ தலைமையில் நடந்த போனஸ் போராட்டம்தான் தொழிலாளர்கட்கு உறுதியும், உத்வேகமும் அளித்து இன்று அனைவரையும் ஒன்று சேர்த்துள்ளது.

### மேல்மட்டச் சதி

மேற்கு வங்கத்தில் நியாயமான தேர்தல்மூலம் வெற்றிபெற முடியாதென நினைத்த இந்திரா அரசு, டில்லியில் மேல்மட்ட அதிகாரிகளுடன் சதிசெய்து தேர்தலையே மோசடி செய்தனர். போலீஸ், ராணுவம், குண்டர்களின் உதவியைக் கொண்டு மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர்களும், ஊழியர்களுமாக 5000 பேரை கொலைசெய்யமுடிவு செய்துள்ளனர். இதுவரை 566 கட்சி முன்னணி ஊழியர்களும், ஆதரவாளர்களும் கொலை செய்யப்பட்டுள்ளனர். இவர்களில் கட்சித் தலைவர்கள் 132, ஆதரவாளர்கள் 48, தொழிற்சங்கத் தலைவர்கள் 103 பேர், விவசாய சங்க ஊழியர்கள் 113 பேர், இளைஞர் முன்னணியைச் சார்ந்தவர்கள் 79 பேர், மாணவர் ஸ்தாபனத்தைச் சேர்ந்தோர் 52 பேர், சிறுவர் 5 பேர், மாதர் ஸ்தாபனத் தலைவிகள் 6 பேர், கலைஞர்கள் 6 பேர், சர்க்கார் ஊழியர்கள் 11 பேர், ஆசிரியர்கள் 12 பேர் இத்தனை பேரைப் பலி கொடுத்தது. மற்ற கட்சியாக இருந்திருந்தால் அழிந்திருக்கும். ஆனால் மேற்கு வங்கத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான் மூன்றும் மக்களின்பேராதரவு பெற்ற கட்சியாகத் திகழ்கிறது என்றும் குறிப்பிட்டார்.

### ஏ, நல்லசிவன்

தோழர் ஏ. நல்லசிவன் (சி ஐ டி யூ உதவிச் செயலாளர்) பேசியதாவது:—

இந்திய நாட்டிலேயே இன்று இந்திராயுகம் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. இடதுசாரிக் கொள்கைகளைக் கொண்டிருந்த சில கட்சிகளும் இந்திராவுக்கு ஆதரவு தந்து வருகின்றன. வலதுசாரி எண்ணம் கொண்ட சிலகட்சிகளின் தலைவர்களும் இந்திரா கட்சியில் சேர்ந்து விட்டனர். ஆனால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான் இந்திய அரசின் அபாயகரமான போக்கை மக்களுக்கு எடுத்துக் கூறிவருகிறது.

1967-ம் வருடத்தில் நாடெங்கும் ஐக்கிய முன்னணிகளும், தொகுதி உடன்பாடும் எதிர்க்கட்சிகளிடையே ஏற்பட்டு, தேர்தல் களத்தில் காங்கிரசைப் படுதோல்வியடையச் செய்தது ஆனால் அதற்குப் பின் அதிகார ஆசையால் காங்கிரஸ் பிளவுண்டு, இந்திராவின் கைஓங்கியது இச்சந்தர்ப்பத்தில் இடதுசாரிக் கட்சிகள் என்று சொல்லிக்கொண்ட வலது கம்யூனிஸ்டுகள், பிரஜா சோஷலிஸ்ட். தி.மு.க. போன்ற கட்சிகள் இந்திராவுக்கு ஆதரவு கொடுக்க முன் வந்தன.

### காங்கிரசுக்குச் சவால் மார்க்சிஸ்ட் கட்சியே

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான் இந்திரா காங்கிரசுக்கு சரியான சவாலாக நின்றது, ஆனால் 1971 பாராளுமன்றத் தேர்தலில், அரசியல் விழிப்புணர்ச்சி பெறாத மாநிலங்களில் இடதுசாரிக் கட்சிகளின் துணையோடு, அகில இந்திய ரேடியோவின் பொய்யான பிரச்சாரத்தின் மூலமும், போலியான சோசலிசப் பிரச்சாரத்தோடும் வெற்றி பெற முடிந்தது. ஆனால் மார்க்சிஸ்ட் பலமாக இருந்த மேற்கு வங்கம், திரிபுரா, கேரளா போன்ற மாநிலங்களில் இந்திரா வெற்றி பெற முடியவில்லை ஆனால் 1972 மாநில சட்டசபைக்கு நடந்த தேர்தலில் வங்கம். திரிபுரா மாநிலங்களில் பொய்யான, போலியான வாக்குறுதியாலும், பிரச்சாரத்தாலும் வெல்ல முடியாது என நினைத்து கடுமையான அடக்கு முறையை கட்டவிழ்த்து விட்டது.

### இந்திராவின் கேடுகெட்ட போக்கு

துப்பாக்கி முனையில் தங்களது வோட்டுகள் பறிமுதல் செய்யப்பட்டதை வங்க மக்கள் அனுபவத்தில் கண்டனர், ஓராண்டுக்கு முன் அரசாங்க ஊழியர்களாக நியமிக்கப்பட்ட காங்கிரஸ் குண்டர்கள் தேர்தல் அதிகாரிகளாக நியமிக்கப்பட்டனர். அவர்கள் காங்கிரசுக்கு ஆதரவாகதான் இருந்திருப்பார்கள் என்பதில் சந்தேகம் இருக்க முடியாது, கேடுகெட்ட பாசிஸ்ட் முறையில்தான் மேற்கு வங்கத்தில் மார்க்சிஸ்ட் கட்சியை அதிகாரத்திற்கு வரவிடாமல் தடுத்து நிறுத்தினர் என்று தெளிவாக விளக்கினர்.

மார்ச் 28-ல் சிறுமுகை ஜீவா திடலில் மார்க்சிஸ்ட் கட்சி பொதுக்கூட்டம் நடைபெற்றது அக்கூட்டத்தில் தோழர்கள் கே. ரமணி (சி ஐ டி யூ தலைவர்) ஏ நல்லசிவன் (சி ஐ டி. யூ துணைச் செயலாளர்) ஆகியோர் பேசினார்கள்.

கூட்டத்திற்கு தோழர் எம். கிருஷ்ணன் தலைமை வகித்தார். மற்றும் கட்சியின் முன்னணி ஊழியர்கள் எஸ். கே. கண்ணுசாமி, ஜி. அதிரேசன், எஸ். எம் லட்சுமணன் ஆகியோரும் சொற்பொழிவாற்றினர்.

### கட்சி நிதி

கட்சியின் மாநாட்டுநிதிக்காக விஸ்கோஸ் கிளையின் சார்பாக, முதல் தவணையாக ரூ. 270ஐ தோழர் கே விநாயகம், தோழர் ரமணியிடம் அளித்தார்.

### தீர்மானங்கள்

இறுதியில், சிறுமுகை ஆசிரியர்களும், மாணவர்களும் பவானிசாகர் கல்விப் பயணம் சென்றுவரும் போது வாகனம் பழுதடைந்து நேரமாகிவிட்டது. இதைச் சாக்கிட்டு தி. மு. க. அவைத் தலைவர் தலைமையில் ரௌடிகள் குடித்துவிட்டு ஆசிரியைகளையும் ஆசிரியர்களையும் தாறுமாறாகப் பேசி தாக்க முயற்சித்ததைக் கண்டித்தும், வாட்ச்மேன், டிரைவர் ஆகியோர் தாக்கப்பட்டதைக் கண்டித்தும், தாக்கிய ரௌடிகள் மீதும் நடவடிக்கை எடுக்க அரசைக் கேட்டுக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டது.

---

### அம்பையில் லெனின் படிப்பக ஆண்டுவிழா

அம்பாசமுத்திரம்
மார்ச் 30—

அம்பாசமுத்திரம் லெனின் படிப்பகத்தின் 4வது ஆண்டுவிழா பொதுக் கூட்டம், 26-ம் தேதி படிப்பகத் தலைவர் தோழர் பழனி தலைமையில் நடைபெற்றது.

அப்பொதுக் கூட்டத்தில் மாநிலஅரசு—மத்திய அரசுகளின் ஜனநாயகவிரோதச் செயலைக் கண்டித்தும் மேற்குவங்கத்தில் நடந்த தேர்தல் மோசடியை விளக்கியும் அம்பை பஞ்சாயத்தின் வார்டுகள் அபிவிருத்திக்கு பணம் ஒதுக்குவதில் பாரபட்சம் காட்டப்படுவதைக் கண்டித்தும்நெல்லை மாவட்ட மார்ச்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர் பாலவிநாயகமும், அம்பைதாலுகா மார்க்சிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர் எஸ். கே பழனிச்சாமியும் சண்முகவேல், மாயாண்டி ஆகியோரும் பேசினர்.

(ந. நி.)

---

# புகளூர், அரியூர் சர்க்கரை ஆலை நிர்வாகிகள்போக்கிற்கு கண்டனம்

புதுவை, மார்ச் 29 —

மார்ச் 16-ம் நாள் அரியூரில் (புதுவை) புதுவை சுகர்மில் லேபர்யூனியன் (சி. ஐ டி யூ) சார்பில் நடைபெற்ற தொழிற்சங்க பொதுக் கூட்டத்திற்கு, ஆர். பானு தலைமைவகித்தார். சங்கத் தலைவர் திரு. கோவிந்தன், நெல்லிக்குப்பம் தொழிற் சங்க நிர்வாகிகள் வீரப்பன் வரதன் ஆகியோர்கள் சொற்பொழிவாற்றினர்கள்.

இரண்டாவதாக ஊதியக்குழுவின் சிபாரிசுகளுக்கு அப்பால், அத்தொழிலாளர்களது கோரிக்கைகளான ஊதிய உயர்வு மற்றும் பல்வேறு உரிமைகளைப்பற்றி பேச்சுவார்த்தைகள் நடத்தவும், தீர்வுகள் காணவும் ஒப்புக்கொண்ட நெல்லிக்குப்பம், புகளூர் சர்க்கரை ஆலை நிர்வாகிகள், சிபாரிசுகளுக்கு அப்பால் கோரிக்கைகளைப் பரிசீலிக்கவும், தயாராக இல்லை என சண்டித்தனம் செய்ததை அடுத்து, நெல்லிக்குப்பத்திலும் புகளூரிலும் அத்தொழிலாளர்கள் 2—3—72 முதல் வேலைநிறுத்தத்தைத் தொடங்கி விட்டனர். தொழிற் சங்கத்துடன் உடனடியாகப் பேசிசுமுக தீர்வுகள் காணுவதற்குப் பதிலாக, நெல்லிக்குப்பம் ஆலை நிர்வாகம், வெட்டப்பட்ட அக்கரும்பை திருட்டுத்தனமாக அரியூருக்கும், முண்டியம்பாக்கத்திற்கும் அனுப்பிவைத்தது. இதை அறிந்ததும், அரியூரில் உள்ள சி ஐ.டி யூ சங்கமும் முண்டியம்பாக்கம் சங்கமும், அக்கரும்புகளை இங்கு அறைக்கக்கூடாது என்றும், அப்படிப்பட்ட நிலையில் அக்கரும்பை இங்கு அறைப்பது நெல்லிக்குப்பத்தில் போராடும் தொழிலாளியின் முதுகில் கத்தியால் குத்துவது போலாகும் எனக்கூறி, அரியூரில் உடனடியாக, அக்கரும்புகளை வெளியேற்றுமாறு வற்புறுத்தி, 4—3—72 முதல் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தைத் தொடங்கி விட்டனர் முண்டியம்பாக்கம் தொழிற்சங்கம் முன்கூட்டியே அந்த ஆலை நிர்வாகத்தை எச்சரித்ததை ஒட்டி. அந்த ஆலை நிர்வாகம, நெல்லிக்குப்பம் கரும்பை ஏற்க மறுத்துவிட்டது. இரண்டு தினங்கள், அரியூரில், நெல்லிக்குப்பம் கரும்பும், சேர்ந்து காய்ந்தன. அதன் பின்னர் இவ்வாண்டுகரும்பு விவசாயிகள் சங்கத்தலைவர்களும் திரு சி, கோவிந்தராஜன் (தலைவர், நெல்லிக்குப்பம் தொ. சங்கம்) திரு. டி. கோவிந்தன், திரு. ஆர். பாலு (தலைவர், செயலாளர் அரியூர் தொ. சங்கம்) ஆகியோர்களை கேட்டுக்கொண்டதற்கிணங்க, தமது கரும்பு விவசாயிகளை நஷ்டப்படுத்தக்கூடாது. என்கின்ற எண்ணத்துடன், திரு. சி. கோவிந்தராசன் அனுமதியளித்ததின் பேரில், வெட்டப்பட்டு நெல்லிக்குப்பத்திலிருந்து அரியூர் ஆலைக்கு சென்ற கரும்பை மட்டும் அறைப்பதென்றும் இனியும் அங்கிருந்து அரியூருக்கு கரும்பு வரக்கூடாது என்கின்ற கண்டிஷனுடனும் முடிவு செய்து அக்கரும்பு 5—3—72ல் அறைக்கப்பட்டது.

16—3—72 ல் அரியூரில் நடந்த நெல்லிக்குப்பம்-புகளூர் சர்க்கரை ஆலைத்தொழிலாளர்களின் வேலைநிறுத்தப்போராட்ட ஆதரவு பொதுக் கூட்டத்"'தில் மேற்படி இரண்டு ஆலைநிர்வாகிகளையும் அரியூர் ஆலை நிர்வாகமும், சர்க்காரும் நிர்ப்பந்தித்து அவ்விரு ஆலைத் தொழிலாளர்களின் கோரிக்கைகளை உடனடியாக செயல்படுத்த வேண்டும் என்றும் மேற்படி இரு ஆலைத் தொழிலாளர் பிரச்னைகளில் அலட்சியம் காட்டப்பட்டால் தீர்வுகாண காலதாமதம் ஏற்பட்டால் அவ்விரு ஆலைத்தொழிலாளர்களுக்கு ஆதரவாக அரியூரிலும் வேலை நிறுத்தம் ஏற்படும் என்று ஏகமனதாக தீர்மானம் நிறைவேற்றப் பட்டுள்ளது.

---

# எடுத்திடப்பா செங்கொடியை கையில் இன்று!

—: இடும்பையன் :—

படம். என் அண்ணன்
பாடல்: நெஞ்சமுண்டு நேர்மையுண்டு

(மேற்கு) வங்கம் தன்னில் வன்முறையை
பாரு தோழா
வாழ்விழந்த மக்கள் கண்ணீர் கேளு தோழா
சட்டம் கொண்டு மட்டம் தட்டும்
ஆட்சி பாராய்—அதில்
சதிகார பண வர்க்க சூழ்ச்சி பாராய்.

தேர்தல் எனும் நாடகம் நடத்ததண்ணே
குண்டர்
தாக்குதலும் மக்கள் உயிரைக்
குடித்ததண்ணே

கட்சித் தோழர் பலர் கழுத்தை
நெறித்ததண்ணே—இந்திரா
காந்தி ஆட்சி பாசிசத்தை
வளர்த்ததண்ணே (வங்க)

ஓட்டு மூலம் மக்கள் கொள்ளும்
உரிமை எல்லாம்—சுடும்
வேட்டுமூலம் தீர்த்துவிட்டார் இந்திரா
எல்லாம்—இன்று
கோட்டை கட்டி வீணர் சிரிக்கும்
சிரிப்புக் கெல்லாம்—நாம்
சாட்டையடிதர ஒன்றுபடும் கால மிதாம்.

புறப்படுங்கள் தோழர்களே ஒன்றுபட்டு
புல்லர் ஆட்சியை ஒழிக்க துணிந்து நின்று
இரண்டில் ஒன்று பார்த்திடுவோம்
என்றுமே சென்று
எடுத்திடப்பா செங்கொடியை
கையில் இன்று! (வங்க)

# மேற்குவங்கத்தில் குண்டர் தாக்குதல் நீடிக்கிறது

# கல்கத்தாவில் பெண்கள் அவமானப்படுத்தப்பட்டனர்

**தேர்தல் நடப்பதற்கு சில தினங்களுக்கு முன்பாக இந்திரா காந்தி ஒரு தேர்தல் பொதுக்கூட்டத்தில் பேசும் போது சத்திரபரிசத் குண்டர்கள் செய்யும் கொலைவெறிச் செயல்களை "தற்காப்பிற்காக திருப்பி தாக்குகிருர்கள்'' என்று அவர்களின் ஈனச் செயல்களுக்கு சமாதானம் கூறினர்.**

**காங்கிரஸ் குண்டர்களின் கொலை செயல்களுக்கு இவ்வாறு இந்திராகாந்தி சப்பைக்கட்டு கட்டியது மட்டுமல்லாது இனிவரும் நாட்களில் அவர்களின் கொலைத்தாக்குதலுக்கு பச்சை விளக்கு காட்டியது போலவும் அமைந்தது.**

ஆனுல் தேர்தல் நாளான மார்ச் 11-ம தேதி துப்பாக்கி தோட்டாக்கள் பறந்தன, வெடிகுண்டுகள் வீசப்பட்டன. உருவ்ய கத்தியுடன் பழைய காலத்து வீரச்செயல் புரியும் வீரர்களைப்போல் காங்கிரஸ் குண்டர்கள் வெறிபிடித்து அலைந்தனர்.

அந்தக்குண்டர்கள் தங்களை ''தற்காத்துக் கொள்வதற்காக திருப்பித் தாக்குவதற்கு'' போலீஸ், மத்திய ரிசர்வ் படையின் முழு பாதுகாப்புதி உதவியும் கிடைத்தது.

## நீசச் செயல்

மோசடித் தேர்தலில் சூழ்ச்சி செய்து வெற்றி பெற்றுவிட்டு மக்கள் முன், 'சிறப்பான தேர்தல் வெற்றி' என்று இந்திரா காங்கரஸ் காரர்களோடு, அவர்கள் கூட்டாளிகளான வலது கம்யூனிஸ்ட்களும் தம்பட்டம் அடித்துக் கொண்டு— வலது கம்யூனிஸ்டகள் தங்களின் திட்டத்தின் இரண்டாம் பாகமான இடது சாரிமுன்னணியினரின் பலம் வாய்ந்த குடிகளை 'பூண்டோடு ஒழிக்கும்' வேலையில் இறங்கியிருக்கிருர்கள்.

ஊரடங்குச் சட்டம் பிறப்பிக்கப் பட்டிருந்தும் ஊர்வலங்கள், தடைசெய்யப்பட்டிருந்தும், ஆயுதந்தாங்கிய காங்கிரஸ் குண்டர்களும், வலது கம்யூனிஸ்டுகளும் வெற்றிஊர்வலங்களை நடத்தினர்கள்.

ஊர்வலம்செல்லும் வழியிலுள்ள மார்க்சிஸ கட்சி இடது சாரி முன்னணி தோழர்களின் வீடுகளைத் தாக்கினர் சூறையாடினர், நெருப்பிட்டுக் கொளுத்தினர், பெண்கள் துன்புறுத்தப்பட்டு அவமானபடுத்தப் பட்டனர். கல்கத்தா மாவட்டத்திலுள்ளமக்கள் ஒவ்வொரு பகலையும் இரவையும் ஒரு யுகமாக எண்ணி கழித்துக் கொண்டிருக்கிருர்கள்.

### கல்கத்தா மாவட்டம் பெல்காச்சியா

மார்ச் 12-ம் நாள் அன்று பெல்காச்சியா டம் டம் ரோட்டிலுள்ள சி ஐ. டி. குடியிருப்பை 200-க்கும் அதிகமான குண்டர் கும்பல்கள் சுற்றி வளைத்தனர். குண்டர்களுடன் வேன்களில போலீசாரும் வந்திறங்கினர்.

வெறி பிடித்த அந்த ரௌடிக் கும்பல்கள் சி ஐ டி. காலனியிலுள்ள வீடுகளுக்குள் புகுந்தனர். அங்கிருந்து இளைஞர்களையும், பள்ளி மாணவர்களையும் பர பரவென்று வெளியே இழுத்து வந்து அடித்து நொறுக்கி போலீசாரிடம் ஒப்படைத்தனர்.

போலீஸ் தடியர்கள் மீண்டும் அந்த இளைஞர்களை தடிகொண்டு தாக்கி கொண்டே சாலா அர் மார்க்சிஸ்ட் ஹரிபி' (ஏ! மாப்பிளே, இனியும் மார்க்சிஸ்ட் கட்சிக்கு வேலை செய்வாயா? என்று கேட்டனர்.

பின் அந்தக் குண்டர்கள் சுற்றியுள்ள பகுதிகளில் கவனம் செலுத்தத் தொடங்கினர்.

மார்க்சிஸ்ட் ஆதரவாளர்கள் நிறைந்த சேரி நம்பர் 21 லும், 22 லும் புகுந்து சூறையாடினர், பல குடிசைகள் தரைமட்டமாக்கப்பட்டன அவர்களின் உடைமைகள் கொள்ளையடிக்கப்பட்டன.

## புதுமணப் பெண் அவமதிப்பு

மதன்சயான் இல்லத்தில் குண்டர்கள் புகுந்து கண்டபடி ஏசினர், அந்த வீட்டிலிருந்த புதிதாக மணமுடிக்கப்பட்ட பெண்ணின் கற்பை குறையாடஎத்தனித்தான் ஒரு போலீஸ் அதிகாரி.

மார்க்சிஸ்ட் கட்சி ஊழியர் தோழர் ராஜ்ஜியோ கோலாவின் மனைவியையும் பெல்காச்சியா பகுதி மார்க்சிஸ்ட்கட்சி தலைவர் தோழர் சத்யபானர்ஜீயின் மணமான தங்கையையும் வெறிபிடித்தஅந்த ரௌடிக் கும்பல்கள் கண்டபடி ஏசி துன்புறுத்தினர்.

தோழர்கள் சாந்திமாய் கோஷின் வீட்டின் மீதும் லட்சுமி செனின் வீட்டின் மீதும் வெடிகுண்டுகளை வீசி தாக்கினர்.

மார்க்சிஸ்ட் கட்சியின் பெல்காச்சியாநகர் கமிட்டி அலுவலகத்தை வெறியிடித்த அந்த காட்டு மிராண்டிக் கும்பல்கள் தாக்கியதோடு மட்டுமல்லாமல் அதைகைப் பற்றியும் கொண்டன.

தோழர் ராணி கோஷ்வாமியை ராணி ரோடிலுள்ள அவரது இல்லத்திலிருந்து ரத்த வெறிபிடித்த அந்த கும்பல்கள் வெளியே இழுத்து வந்து ரத்தம் சொட்டச்சொட்ட அடித்தனர்.

கொலை பாதகர்களால் கொடுமைக்கு ஆளாக்கப்பட்ட அவர் அன்றிலிருந்து காணப்படவே இல்லை.

## ஸ்யாம்புக்கூர்

மார்க்சிஸ்ட் கட்சி கவுன்சிலர் தோழர் ரத்தன்தீப் ஸ்யாம்புக்கூர் தொகுதியில் மார்க்சிஸ்ட் கட்சி வேட்பாளராக போட்டியிட்டிருப்பவர். அவர் காரில் வேகமாக ஒரு காங்கிரஸ்முகாமை கடந்து சென்று கொண்டிருந்தார்.

கடந்து கொண்டிருக்கும் அவரது காரின் மீது காங்கிரஸ் முகாமிலிருந்து வெடி குண்டு வீசப்பட்டது. மத்திய ரிசர்வ் போலீசார் துப்பாக்கியால் சுட்டனர்.

தோழர் தீப் நேராக தானு போலீஸ் நிலையத்திற்குச் சென்று புகார் கொடுக்கச் சென்றபோது அங்கு அவர் மீது வெடிகுண்டு வீசியதாக ஏற்கனவே புகார் கொடுக்கப் பட்டிருந்தது.

அந்த புகாரின் மீது அவரது கார் பறிமுதல் செய்யப்பட்டது. தோழர் தீப் மீதும், மார்க்சிஸ்ட் கட்சி கவுன்சிலரும், மேற்குவங்க செகண்டரிபோர்டு ஆசிரியர் இயக்கத் தலைவருமான தோழர் கோலகபதிராயின் மீதும் குண்டுவீசியதாக வழக்குப் பதிவு செய்யப்பட்டது.

மார்ச் 15-ம் நாள், 30 ரத்த வெறி பிடித்த அந்த காட்டு மிராண்டிக் கும்பல்கள் சுழல் துப்பாக்கிகள், வெடி குண்டுகள், கை துப்பாக்கிகள் கொண்டு தோழர் ரத்தன் தீப்பின் வீட்டையும், ஜெய்பூரியா கல்லூரியையும் தாக்கினர்.

அந்தக் கொலைகாரர்கள் ஒரு மாணவரை வெளியே இழுத்து வந்து வெறி கொண்டு தாக்கினர். போலீசுக்குத் தகவல் கொடுக்கப்பட்டது. போலீசாரும் வந்தனர்.

வந்த அந்த போலீசார், தாக்கிய அந்த காலிக் கும்பல்களை கண்டு விரலைக் கூடத் தொடவில்லை. மாறாக அங்கு குழுமியிருந்த மேற்கு வங்க மாணவர் சங்கத்தைச் சேர்ந்த மாணவர்களை மிரட்டி விட்டுச் சென்றனர். பின்னர் அந்தக் கல்லூரி மூடப்பட்டது.

அந்தக் கும்பல்கள் 56, துர்காசரண் மித்ரா தெருவிலுள்ள மார்க்சிஸ்ட் கட்சி நகர் கமிட்டி அலுவலகத்தை தாக்கின. அங்கிருந்த மார்க்சிஸ்ட் கட்சி ஊழியர்களை துப்பாக்கி முனையில் தூக்கி எறிந்தனர்.

கட்சி அலுவலகத்திலிருந்த லெனின் படத்தை துண்டு துண்டாக கிழித்தெறிந்தனர். இதை எதிர்த்த அங்கிருந்த பெண்களிடம் தவருக நடந்து கொண்டனர், கொடும்பாவிகள்!

அன்றிரவே மற்றொரு ஆயுதந்தாங்கிய குடிகாரக்கும்பல்கள் துப்பாக்கிகளுடன் நிலே என்ற கட்சி ஊழியரை நையப்புடைத்து போலீசாரிடம் ஒப்படைத்தன.

ஸ்யாம்புக்கூரிலுள்ள பல குடும்பங்கள் துப்பாக்கி முனையில் அப்பகுதியிலிருந்து காலி செய்யப்பட்டனர்.

## டாலிகஞ்சில்

மார்ச் 14 நாள் டாலிகஞ்சில் நாராயன்ராய் என்ற ஜனநாயக வாலிபர் சங்க ஊழியர் கடத்தப்பட்டார். இதை எதிர்த்து 400 பெண்கள் கிளர்ச்சி செய்தனர். கிளர்ந்தெழுந்த அப்பெண்மணிகளின் மீது ரௌடிகள் வெடிகுண்டுகளை வீசினர். கற்களை அள்ளி எறிந்தனர். குண்டர்களுக்குப் பாதுகாப்பாக ஒருலாரிபோலீஸ் அங்கு வந்து நின்றது;

குண்டர்களின் கல்வீச்சில் பெண்கள் இயக்கத்தின் முன்னணித்தலைவர்தோழர் கிருஷ்ணசட்டர்ஜி படுகாயமடைந்தார்.

போலீசாரும் குண்டர்களும் 1, 3 4. வார்டுகளை சுற்றி வளைத்தனர்.

அங்கு போலீசார் தோழர் ஹரிபாதகோஷ்சை கைது செய்தனர்.

ஆனுல் எராளமான பெண்கள் கூடி நின்று போலீசாரின் இந்த ஈனச் செயலுக்கு கண்டனம் தெரிவித்து மறித்தனர். எனவே போலீசார் அவரை விடுதலை செய்ய வேண்டி வந்தது.

# சென்னை பட்டதாரி ஆசிரியர்கள் கூட்டம்

சென்னை, மார்ச், 23—

சென்னை நகர பட்டதாரி ஆசிரியர்களின் கூட்டம் மார்ச் 26-ல் பிராட்வே சகாயமேரி மணிமண்டபத்தில் தலைவர் திரு எம்.சண்முகம் தலைமையில் நடைபெற்றது. நடந்து முடிந்த போராட்டம் பற்றியும், திருச்சி செயற்குழு முடிவுகள் பற்றியும் அவர் எடுத்துக் கூறினர். மாநில அளவில் தனியார் பள்ளி பட்டதாரி ஆசிரியர்கள் அனைவரையும் இணைத்த ஓர் அமைப்பு உருவாக இருப்பதையும் அறிவித்தார். செயலாளர் திரு கே. தியாகராஜன் பேசும்பொழுது தேர்வு நிலை 6 ஆண்டுக்காலம் முடிந்தவர்களுக்கு கொடுக்கவேண்டும் எனவும், தனியார் பள்ளி ஆசிரியர்களுக்கு வேலைப்பாதுகாப்புகான சட்டம் விரைவிலேயே கொண்டுவரப்படவேண்டுமெனவும் வற்புறுத்தினர். கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஒருமனதாக நிறைவேறின.

### தீர்மானங்கள்

1) பட்டதாரி ஆசிரியர்களின் சம்பளவிகிதம் ரூபாய் 375-15-495-20 575-25-650 என மாற்றியமைக்கப்படவேண்டும்.

2) பாட வேலைகளை அதிகப்படுத்துவதையும், பள்ளி வேலை நாட்களை அதிகப் படுத்துவதையும் இச்சங்கம் எதிர்க்கின்றது கல்வித் தரத்தை உயர்த்துவதற்கு இது வழியல்ல மாறுக, அரசு ஆணை 250 ஐ அமுல் படுத்தி வகுப்புகளில் மாணவர்களின் எண்ணிக்கையை குறைப்பது மூலம் தான் தரத்தை உயர்த்த முடியும்.

மாநகராட்சி பட்டதாரி ஆசிரியர் சங்க செயலாளர் திரு லாரன்ஸ் பேசும்போது ஆசிரியர்கள் அனைவரும் ஒற்றுமையாக இருந்து தமது நியாயமான கோரிக்கைகளுக்குப் போராட வேண்டும் எனக்கூறினர். செங்கை நகரப் பட்டதாரி ஆசிரியர்சங்கத்தைசென்னை சங்கத்துடன் இணைத்துக் கொள்ள தீர்மானிக்கப்பட்டது.

# சுவையான செய்திகள்

## பிளாஸ்டிக் மரம்

வருங்காலத்தில் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் லாஸ் ஏஞ்சல்ஸ் நகரை அகழ்ந்து பார்த்தால், அந்த நகரின் ஜெபர்சன் சாலையில் விசித்திரமான தடையங்கள் சிலவற்றைக் கண்டறியக்கூடும். ஏனெனில் சிக்கனத்தை முன்னிட்டு லாஸ் ஏஞ்சல்ஸ் நகராட்சி அந்த சாலையில் 900 பிளாஸ்டிக் மரங்களை நட்டு வைத்திருக்கிறது. பிளாஸ்டிக் மரங்களை நட்டு வைத்திருக்கிறது. பிளாஸ்டிக் மரங்களை நடுவதற்கு 75 504 டாலர்கள் செலவாகிறது. அதே சமயத்தில் அவற்றுக்குத் தண்ணீர் விட வேண்டியது இல்லை. அவற்றை வெட்டிவிட வேண்டியதில்லை; அத்துடன் பிளாஸ்டிக் மரங்கள் இலைகளையும் உதிர்க்காது என்று ஓர் அதிகாரி கூறியதாக டைம்ஸ் பத்திரிகை எழுதியுள்ளது.

இனி அந்த மரங்களில் பிளாஸ்டிக் பறவைகளும் பிளாஸ்டிக் வண்ணத்துப் பூச்சிகளும் இடம் பெற்றாலும் பெறக்கூடும் என்று லாஸ் ஏஞ்செல்ஸ் டைம்ஸ் பத்திரிகை எழுதியுள்ளது.

## போரும் அமைதியும்நாவலை எழுதியது யார்?

'போரும் அமைதியும்' என்ற உலகப் புகழ் பெற்ற நாவலை எழுதியர் ரஷ்ய எழுத்தாளரான டால்ஸ்டாய் என்பதை ஒரளவு பொது அறிவு உள்ளவர்களும் அறிவார்கள். ஆனுல் இங்கிலாந்திலிருந்து வெளிவரும் எஜுகேஷனல் ரிசர்ச் என்ற பத்திரிகை நடத்திய பொது அறிவுப் பரீட்சை ஒன்றில் இந்தக் கேள்விக்கு விசித்திரமான விடைகள் எல்லாம் வந்தன. ஓர் ஆசிரியர் பயிற்சிப் பள்ளி ஆசிரிய மாணவர் ஒருவர் அதனை எழுதியது வின்ஸ்டன சர்ச்சில என்று குறிப்பிட்டிருந்தார் வேறு சிலர் கிராகாம் கிரீன், லியான் டிராட்ஸ்கி என்றெல்லாம் எழுதியிருந்தனர். மான்செஸ்டர், கிளாஸ்கோ, லிவர்பூல் ஆகிய இடங்களிலுள்ள ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளைச் சேர்ந்த மாணர்களில் 568 பேர் இந்தப்பரீட்சையில் கலந்து கொண்டனர், இவர்களில் வெகுசிலரே மிகச் சரியான விடையை எழுந்தியிருந்தனர், இது போல் இலக்கியம், இசை, கலை முதலிய பல விஷயங்களைக் குறித்துக் கேட்கப் பட்டிருந்தஏனைய 49 சாதாரண கேள்விகளுக்கும் இத்தகைய விசித்திரமான பதில்களே வந்திருந்தன. பதில் அளித்தவர்களில் முக்கால்வாசிப் பேர் 90 சதவிகிதம் தவருன விடை அளித்தனர். சுமார் 30 சதவிகிதம் பேர்தான் சுமாரான விடையளித்திருந்தனர். இந்தப்பரீட்சையை நடத்திய வில்பிரெட் ஹாப்கின்ஸ் என்பவர் "இவ்வளவு குறைந்த மார்க்குகளை வாங்கக் கூடிய மாணவர்களைப் படித்தவர்கள் என்று கூற முடியுமா என்பது சர்ச்சைக்குரிய விஷயம்'' என்று நாசுக்காகக் கூறியுள்ளார்.

## கிரீச்சிடும் மாடிகள்

நியூயார்க் நகரில் வானளாவி வளர்ந்துநிற்கும் பல அடுக்கு மாடிகள் பெருத்த காற்றடித்தால் மிகவும் ஆடத்தொடங்கி விடுகின்றன. புயலில் அகப்பட்ட கப்பலைப்போல் அவை முனகி கிரீச்சிடுகின்றன என்று இண்டர் நேஷனல் ஹெரால்டு டிரிபியூன் பத்திரிகை எழுதியுள்ளது. மேலும், அந்த மாடிகள் இவ்வாறு ஆடும்போது சுவரில் காது வைத்துக் கேட்டால் கட்டிடங்கள் முனகிப்பாடும் சப்தமே கேட்கிறது. காற்று அதிகமாயிருத்தால், முனகல் மொறுமொறுப்பாகி விடுகிறது என்று இத்தகைய மாடியொன்றில் வேலை பார்க்கும் பாங்குச் சிப்பந்தி ஒருவர் கூறியுள்ளார்.

## காணமற்போன பீப்பாய்

மேல் ஆஸ்திரியாவின் தலைநகரான லின்ஸிலுள்ள மக்களுக்கு இப்போது ஒரு பெருத்த பயம் ஏற்பட்டுள்ளது. அதாவது சென்ற ஜனவரி மாதத்தில் பாரிசலில் அனுப்பப்பட்ட, சோடியம் சைனடுகொண்ட இரண்டு பீப்பாய்கள் செல்லும் வழியில் டிரானுக்கும் லின்ஸுக்கும் இடையே எங்கோ தொலைந்து போய்விட்டன. சோடியம் சைனடு படுபயங்கரமான விஷப் பொருள். எளிதில் நீரில் கரையக்கூடியது. சில அரிசி எடையுள்ள சைனடே ஒரு மனிதனைக் கொல்லப்போதுமானது. மரண தண்டனையை நிறைவேற்றுவதற்காக, அமெரிக்காவிலுள்ள சில மாநிலங்கள் சோடியம் சைனடைப் பயன்படுத்தி வருவதாக, அஸோஸியேட்டட் பிரஸ் செய்தி கூறுகிறது

லின்ஸுக்கு அருகில் தொலைந்து போன சைனடின் அளவு 100 கிலோகிராம் இருக்கும். இது அந்நகரின் வசிக்கும் இரண்டு லட்சம் மக்களையும் கொல்லப் போதுமானதாகும், மேலும் அந்த சைனடு பார்ப்பதற்கு மிட்டாய் போல இருக்கும் எனவே குழந்தைகள் கையில் அது கிடைத்தால், அவர்கள் அதைத் தின்றுவிடக் கூடிய அபாயமும் உள்ளது.

இந்தச் சரக்கை அனுப்பிய கம்பெனியின் அஜாக்கிரதையினுல் தான் இந்தத் தவறு நேர்ந்து விட்டது என்று சொல்லப்படுகிறது, மேலும் இது காணமற்போனதைப் பற்றி மூன்று வார காலத்துக்கு மேல் வெளியில் தெரியாமலே அதனைக் கண்டுபிடிக்க அந்தக்கம்பெனிமுயன்றது. அந்த முயற்சியும தோற்றுவிட்டது இப்போது பாதுகாப்புத் துறையே இதனைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது போலீசார் இது பற்றித் தீவிரமாகப் புலன விசாரணை செய்து வருகின்றனர். இந்தப் பீப்பாய்களை யாரேனும் கண்டுபிடித்தால் அவற்றைத் தொட வேண்டாம் என்றும், போலீசுக்கு உடனே தகவல் கொடுத்தால் போதும் என்றும் எச்சரிக்கபபட்டுள்ளது.

### எம். என். ஓ க்கள் நியமனம்

## கடைநிலை ஊழியர் கோரிக்கை

மதுரை, மார்ச், 31—

ஆஸ்பத்திரி ஊழியர் சங்கத்தினர்-எம். என். ஓ.க்களை நேரடியாக நியமனம்செய்வதன் மூலம் தங்களின் பதவி உயர்வு மிகவும் பாதிக்கப் படுவதால் கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளனர்.

எனவே மருத்துவ மனையிலுள்ள லஸ்கா, ஸ்ரெட்சர் தூக்குபவர், தண்ணீர் கொண்டு வருபவர் ஆகியவர்களுக்கு எம் என். ஓக்களாக பதவி உயர்வு அளிக்கப்பட வேண்டும்.

### மன்னை தாலுகா

## விவசாயிகள் சங்கக் கூட்டம்

மன்னுர்குடி, மார்ச். 31—

மன்னார்குடி தாலுகா ராதாநரசிம்மபுரத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பான விவசாய சங்க, விவசாயத் தொழிலாளர்கள் சங்க அமைப்புக் கூட்டம் மார்ச்2ல் நடைபெற்றது. கூட்டத்துக்கு தோழர் ஆ. வ. காத்தமுத்து தலைமைவகித்தார்'

மன்னை தாலுகா விவசாயிகள் சங்க தலைவர் தோழர் பி. வெங்கடேசன் தஞ்சை மாட்டக் குழு உறுப்பினர்தோழர் சி.காசிநாதன் கலந்து கொண்டு ஏப்ரல் 1-ந் தேதி முதல் ஏப்ரல் 10-ந் தேதி முடிய நடை பெற இருக்கும் 16 அம்ச நிலை வெளியேற்ற எதிர்ப்பு பிரச்சார பாதயாத்திரையில் கலந்து கொள்ளக் கூடிய தோழர்களுக்கு உணவளிப்பது நிதியளிப்பது என்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

ஆ. வ. குப்புசாமி (தலைவர்), கு. ரெத்தினம் (உப தலைவர்), கோ. செல்வராசு (செயலர்.) ஆர். பூ.பாலசுந்தரம் (உப செயலர்) ரெ அப்பாவு (பொருளர்). சி. பக்கிரி, வீ அய்யாக்கண்ணு. கோ காசிநாதன், டை. தட்சணமூர்த்தி ஆகிய 9தோழர்களைக் கொண்ட விவசாயிகள் சங்க, விவசாயத் தொழிலாளர் சங்க கமிட்டி அமைக்கப்பட்டது.

### நாகை தாலுகாவில்

## விவசாயிகள் பிரச்சாரப் பாதயாத்திரைகள்

**தஞ்சைமாவட்டம் நாகைத் தாலுகாவில் ஏப்ரல் 1-ம் தேதியிலிருந்து விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் பாதயாத்திரை இயக்கம் தொடங்குகிறது. அந்த விவரம் வருமாறு:—**

### முதல் குழு

எஸ். கணேசன்

குழுவினர்: தோழர்கள்

என். வடிவேல்
எஸ். ஸ்ரீராமன்
பி. அய்யாக்கண்ணு
கே. காளிமுத்து
வி. வேலு
கே. சுப்பிரமணியன்
இ. கணபதி
உ. முத்தையன்
வி. தங்கசாமி.

1—4—72

காலை: வலிவலம், சுந்தர பாண்டியம், ஏர்வக்காடு
மதியம்: தெற்குப்பனையூர் முப்பத்திக்கோட்டகம்
இரவு: களத்திடல்கரை பொதுக்கூட்டம்

2—4—72

காலை: மடப்புரம், வாழக்கரை
மதியம்; திருக்குவளை
இரவு: எட்டுக்குடி பொதுக்கூட்டம்

3—4—72

காலை: திருவாய்மூர்
மதியம்: ஈசனூர். கீழையூர்
இரவு: வெண்மணச்சேரி பொதுக்கூட்டம்

4—4—72

மதியம்: சடையம் கோட்டகம்
இரவு: தாழன்திருவாசல்

5—4—72

காலை: வேட்டைக்காரன் இருப்பு, புதுப்பள்ளி
மதியம்: காரப்பிடாகை, சித்தாமணி
இரவு: திருப்பூண்டி பொதுக்கூட்டம்

6—4—72

காலை: மேலப்பிடாகை, கருங்கண்ணி
மதியம்: சோழஉத்தியாபுரம், தலையாமழை
இரவு: பெரியதும்பூர் பொதுக்கூட்டம்

7—4—72

காலை: ஆலமழை
மதியம்: சின்னதும்பூர்
இரவு: கிராமத்துமேடு பொதுக்கூட்டம்

8—4—72

பிரதாபராமபுரம்— காலை, மதியம். இரவு பொதுக்கூட்டம்

9—4—72

மதியம்: வேளாங்கண்ணி, தெற்குப்பொய்யூர்
இரவு: வடக்குப் பொய்யூர் பொதுக்கூட்டம்

10—4—72

காலை: கருவேலங்கடை
மதியம்: திவு
இரவு: நாகை பொதுக்கூட்டம்

### 2-வது குழு

தலைவர்: தோழர்எம்.சே. கணபதி

குழுவினர்; தோழர்கள் பி.ஏ. குருசாமி, பி சின்ன தம்பி, எம். கோவிந்தசாமி கே. கோபால், எம், கிருஷ்ணமூர்த்தி, ஏ. எஸ். ரெத்தினம், கே. சின்னப்பா ஜி.பக்கிரிசாமி, இ. அஞ்சான்

1—4—72

காலை: வலிவலம், ஆதமங்கலம்,
மதியம்: சுண்ணாப்பூர், நாகலூர்
இரவு: மாணலூர் பொதுக்கூட்டம்

2—4—72

காலை: கிள்ளுக்குடி
மதியம்: எறையாங்குடி
இரவு: பாலக் குறிச்சி பொதுக்கூட்டம்.

3—4—72

காலை; தன்னலப் பாடி, செம்பியனமகாதேவி
மதியம்: வண்டலூர், வெண்மணி
இரவு: காரியமங்கலம் பொதுக்கூட்டம்

4—4—72

காலை: காவலக்குடி
மதியம் மயிலாங்குடி ரெட்டமதகடி, ஆத்தூர்.
இரவு: தேவூர் பொதுக் கூட்டம்.

5—4—72

காலை: இருக்கை, வடுகச்சேரி
மதியம்: ராதாமங்கலம் தெற்காலத்தூர், இலுப்பூர் செருநல்லூர்
இரவு: கூத்தூர் பொதுக் கூட்டம்

6—4—72

காலை; நீலப்பாடி, குருக்கத்தி எரவாஞ்சேரி, ஒதியத்தூர்
மதியம்: கிவளூர், பட்டமங்கலம், வடக்காலத்தூர் புதுச்சேரி
இரவு: ஆவராணிபொது கூட்டம்

7—4—72

காலை: திருக்கணங்குடி, அகரக்கடம்பனூர் ஆழியூர்
மதியம்: தேமங்கலம், சிக்கல்:
இரவு: அகரஒரத்தூர் பொதுக்கூட்டம்

3—4—72

காலை; ஒரத்தூர்
மதியம்: மகாதானம் மாணிக்கப்பங்கு, ஆய்மழை குரிச்சி
இரவு: செட்டிச்சேரி பொதுக்கூட்டம்

9—4—72

காலை: பாப்பாக்கோவில்
மதியம்: நரியங்குடி, மஞ்சக்கொல்லை.
இரவு: அந்தணப்பேட்டை பொதுக்கூட்டம்
காலை: பரங்கிநல்லூர் ஐவநல்லூர்
மதியம்: செல்லூர்
இரவு: நாகை பொதுக் கூட்டம்

இடம்: கோமல் (திருக்காரவாசல் கிளை) 1—4—72சனி மாலை 6 மணிக்கு. தலைவர்: தோழர் வி. அஞ்சான்

பேசுவோர்: தோழர்கள், கே. ஆர். ஞானசம்பந்தன் பி. நாகராஜன், எம். செல்லமுத்து ஏ. சிங்காரவேல் ராயர் ஆர், சி. சிவகுருநாதன் என். முத்துச்சாமி வி. வேலு எஸ். வீரசாமி

அன்று இரவு தியாகி சிவராமன் கலை குழுவின் கலை நிகழ்ச்சி நடைபெறும்.

### மதுரையில்

2—4—72 மாலை 7மணிக்கு

செல்லூர் களத்துப் பொட்டலில் தோழர்கள் எஸ் ஏ தங்கராஜ் ஆர். அங்கமுத்து கே. அய்யாவு எம். குமாசாமி ஆகியோர் பேசுவர்

## வருந்துகிறோம்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நீண்ட நாள் உறுப்பினரும் பொன்மேனி பேரூராட்சி மன்றத்தின் முன்னாள் உறுப்பினருமான தோழியர் தவமணியம்மாள் மதுரை பெத்தானியாபுரத்திலுள்ள தமது வீட்டில் மார்ச் 27 மாலை காலமானதை அறிவிக்க வருந்துகிறோம். அவருக்கு வயது 58.

மறுநாள் நடைபெற்ற இறுதி ஊர்வலத்தில் கட்சி உறுப்பினர்களும் அனுதாபிகளும் கலந்து கொண்டனர்.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் 'தீக்கதிர்' அச்சகத்தில் (13, முதல் சந்து வடக்குச் சித்திரைவீதி, மதுரை 1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே முத்தையா.